# சிங்கை உலகம்மை கொச்சகக் கலிப்பா

*ஆசிரியர்*

திருவாவடுதுறை ஆதீனம் சிவஞான சுவாமிகளின்
சிறிய தந்தையார்
**நமச்சிவாயக் கவிராயர்**

*உரைவிளக்கம்*

குன்றக்குடி ஆதீனப்புலவர், தமிழாகரர்
**வித்துவான். க. கதிரேசன் எம்.ஏ; பிஎட்**
பூவாளூர். 621 712, **அலைபேசி** 098651 93754.

# சிங்கை உலகம்மை கொச்சகக்கலிப்பா

## நூல்

1. **என்பால் இரங்கா(து) இரும்பால் மனம்படைத்த**
**வன்பால் அறப்பால் மறப்பால(து) ஆகாதோ**
**அன்பால் முலைப்பால் அழும்பா லனுக்(கு)அளித்த**
**உன்பால் அடைந்தேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : என்பால்= என்மேல். வன்பால்= வன்மையான இயல்பு. அறப்பால்= அறவழி. மறப்பாலது= சினத்தின்வழிப்பட்ட செயல். அழும்பாலன்= அழுத குழந்தையாகிய திருஞானசம்பந்தர். அடைந்தேன்= அடைக்கலம் புகுந்தேன்.

**பொழிப்புரை** : உலகை உனக்கே உரிமையாகவுடைய தாயே! குளக்கரையில் அழுத பாலனாகிய திருஞானசம்பந்தர்க்கு, அன்பின்காரணமாக உனதுதிருமுலைப்பால் சுரந்து, பருகப் பொற்கிண்ணத்தில் வழங்கியவளே! நீ என்மேல் இரக்கம்காட்டாது, வலியஇரும்புமனம் கொண்டிருப்பது, வலிமையான அறத்தின் வழிப்பட்ட சினத்தினாலான செயலாகாதோ! கருணை காட்டு.

**விளக்கம்** : அழுதகுழந்தைமேல் கருணைகாட்டிய நீ, உன்னைச்சரணடைந்த பாவியாகிய எனக்கு அருளாதது, அறத்திவழிப்பட்ட சினம் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

2. **என்னுடைய சென்மம் இனிஅடையேன் அல்லன்எனில்**
**பொன்னுடைய மின்இடையும் பொன்னடியும் காண்பேனோ**
**மின்னுடைய பல்அதுக்கி மேதிஉடை யான்வருநாள்**
**உன்னுடைய தஞ்சம் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : சென்மம் இனி அடையேன்= இனிப்பிறக்கமாட்டேன்.அல்லன் எனில்= மீண்டும் பிறந்தால். பொன்னுடைய= பொன்னாடை உடுத்த. பொன் அடி= அழகிய திருவடி. மின்= ஒளி. அதுக்கி= கடித்து.

**பொழிப்புரை** : ஒளிரும் பற்களைச் சினத்தால் கடித்துக்கொண்டு, எருமைக்கடாவுடைய எமன் என்னைப்பற்ற வரும்போது உலகை உனக்கே உரிமையாகவுடைய தாயே! நான் உன்னைச்சரணடைவேன். அதனால் நான் இனிப்பிறக்கமாட்டேன். அங்ஙனமல்லாது பிறந்தால் பொன்னாடை உடுத்த மின்னல் ஒத்த உனது இடை, அழகியதிருவடி ஆகியவற்றை நான் காண்பேனோ. காணும்வாய்ப்பு அருள்.

**இலக்கணக்குறிப்பு** : பொன்னுடைய - பொன் - ஆகுபெயர்.

3. **ஏகிவிடில் இப்பிறவி இன்னும்ஒரு சென்மம்எடுத்**
**தாகிலும் செம்பாறு மருவியும்நான் காண்பேனோ**
**போகியர்போல் ஐம்புலனும் போம்வழிபோ காதேசிவ**
**யோகியர்தம் பேறே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : ஏகிவிடில்= உயிர்ப்போனால், எடுத்தாகிலும்= பிறந்தாவது, செம்பாறு மருவி= செவ்வழியில் நடந்து, போகியர்= இல்லறத்தார்.

**பொழிப்புரை** : சிவயோகியரின் பேறாக உள்ளவளே! உலகை உனக்கே உரிமையாக - வுடையதாயே! இவ்வுயிர்போய் மேலும் ஒருபிறவி எடுத்தாவது செம்மையான வழியில் நடந்து, இல்லறத்தார்போல் என்ஐம்புலன்களும் ஓடும்வழியில் செல்லாது நான் உன்னைக் காண்பேனோ.

4. **எண்பொருந என்நெஞ்சால் இன்னமும்உன் கோபுரமும்**
. **தண்பொருநை நல்நதியும் சந்நிதியும் காண்பேனோ**
**பண்(பு)ஒருவா நீதிப் பழங்கடவுள் வேதாந்தத்(து)**
**ஒண்பொருளே அம்மே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : எண்பொருந= எண்ணத்திற்கு அரசன்! இன்னமும்= இனிமேலும். பண்பு ஒருவா= எண்குணங்களில் எதுவும் நீங்காத. நீதி= அறவடிவு. பழங்கடவுள்= அநாதியான சிவபிரான். வேதாந்தம்= உபநிடதம்.

**பொழிப்புரை** : எண்குணங்களில் நீங்காத அநாதியான சிவபிரானுக்குரிய உபநிடதத்தில் உள்ள ஒளிவடிவான பொருளே! உலகனைத்தையும் தனக்கே உரிமையாகவுடைய தாயே! எனது எண்ணங்களுக்கு அரசனான எனதுமனத்தால் இன்னமும் உன்திருக்கோயிலையும், தண்ணிய வளமான ஆறாகிய பொருநையாற்றையும், உனது சந்நிதியையும் கண்டுகொண்டிருப்பேனோ! உன்திருவடியில் சேர்த்துக்கொள்.

**விளக்கம்** : வேதம் வேதாந்தம் ஆகிய இரண்டிலும் ஆங்காங்கே பலகடவுளர் கூறப்படுகின்றனர், அப்பலருள் ஒருவனாகச்சிவபிரரானையும் வைத்துக்கூறுகின்றனர். தன்னொப்பில்லாத் தனிப்பெரும் முதல்வன் சிவபிரானை தேவருள் ஒருவனாகக்கூறுதல் பெரும்பிழை என்பதைச் சித்தியார்,

" தேவருள் ஒருவன் என்பர் திருஉருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்றது ஓரார், முதல்உருப் பாதி மாதர்
ஆவதும் உணரார், ஆதி அரிஅயற்கு அறிய ஒண்ணா
மேவரு நிலையும் ஓரார், அவன்உரு விளைவும் ஓரார் ( 49 )

" போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகிஆ னாற்போல் செய்த வினகளை வீட்டல் ஓரார்
ஊகியா மூடர் எல்லாம் உம்பரின் ஒருவன் என்பார் " ( 50 )

என்று சிவபரத்துவத்துவத்தின் தனிச்சிறப்பைக்கூறுவதுடன், தேவருள் ஒருவனாகச் சிவபிரானைக் கூறுவோரை " ஊகியா மூடர் " என்றும் கூறும்.

இதனைத்தெளிவாக உணர்ந்த நம் நமச்சிவாயக் கவிராயர், வேதாந்தம் கூறும் பிறகடவுளரில் இருந்துபிரித்து அம்மையப்பனின் உயர்வைச்சுட்ட " வேதாந்தத்து ஒண்பொருளே " என்று விளிக்கிறார்.

5. **நாறும் முடைஉடம்பு நந்தினால் எந்தைஒரு**
**கூறும் உனதுதிருக் கோலமும்நான் காண்பேனோ**
**ஆறுபதப் புள்ளினங்கள் அள்ளிமுகந்(து) உண்ணநறவு**
**ஊறும் மலர்க்கூந்தல் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நந்தினால்= கெட்டால். எந்தை ஒருகூறு= எம்தந்தையாகிய சிவபிரானின் வலதுகூறும். உனது திருக்கோலமும்= இடதுகூறாகிய உன்னழகையும். ஆறுபதப்புள்= ஆறுகால்களுடைய வண்டுகள். நறவு= தேன்.

**பொழிப்புரை** : ஆறுகால்களையுடைய வண்டுகள் முகந்துஎடுத்துப் பருகும்படியாகக் கூந்தலில் தேனூறும்மலர்கள் சூடிய உலகுடைய தாயே! முடைநாற்றம்வீசும் இந்தஉடம்பு கெட்டால் , எம்தந்தையாகிய சிவபிரானுக்குரிய வலதுகூறும், உனக்குரிய இடதுகூறின் அழகையும் நான் காணமுடியாது. எனவே இப்போதே காட்சிதந்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கூறும் கோலமும் - எண்ணும்மைகள். காண்பேனோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

6. **அண்டருலக(கு) எய்திடினும் ஆறும் படித்துறையும்**
**தண்டலையும் தென்பொதியச் சாரலும்நான் காண்பேனோ**
**துண்ட மதிக்குடுமித் தொங்கலார் சிந்தையை**
**உண்டகதிர் வேல்கண் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அண்டருலகு= தேவருலகம். ஆறு= பொருநையாறு. படித்துறை= படித்துறையிலுள்ள உன்திருக்கோயில். தண்டலை= சோலைகள். குடுமி துண்டமதி= தலையில் உள்ள பிறைநிலா. தொங்கலார்= மாலையணிந்த சிவபிரான், சிந்தையை உண்ட= மனம்கவர்ந்த. கதிர்= ஒளி.

**பொழிப்புரை** : தலையில் பிறையுடன் கொன்றைமாலை சூடிய சிவபிரானின் மனம்கவர்ந்த ஒளியுடையதும் வேல்போன்றதுமாகிய கண்களுடைய உலகுடைய தாயே! நான் தேவருலகம் சென்றாலும் உன் எதிரேஓடும் பொருநையாற்றையும், அதன்படித்துறையில் அமைந்த உன்திருக்கோயிலையும், அதைச்சூழ்ந்த சோலையையும் இவற்றைத் தன்னகத்தேகொண்ட பொதிகைச் சாரலையும் காண்பேன்.

**இலக்கணக்குறிப்பு** : ஆறும் படித்துறையும் தண்டலையும் சாரலும் - எண்ணும்மைகள். படித்துறை - இடவாகுபெயர். காண்பேனோ - ஓகாரம் அசைநிலை.

7. **தீட்டுதமிழ் மாமுனிக்குச் சித்திரைமா தப்பிறப்பில்**
**காட்டுமணக் கோலம்எந்தக் காலமும்நான் காண்பேனோ**
**வேட்டுமுலைப் பால்இமய வெற்பரசி ஒக்கலைவைத்(து)**
**ஊட்டும் மகவே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தமிழ் தீட்டு மாமுனி= அகத்தியம் என்ற தமிழ்நூலை எழுதிய சிறந்தஅகத்திய முனிவர். வேட்டு= விரும்பி. இமயவெற்பரசி= பார்வதிதேவி. ஒக்கலை= மடி. ஊட்டும்மகவே ஊட்டும் குழந்தையே.

**பொழிப்புரை** : விருப்புடன்மடியில் வைத்து இமயமலை அரசியாகிய மேனை திருமுலைப்பால் ஊட்டஉண்ட மகளாகியஉலகுடையதாயே! அகத்தியம் என்ற தமிழ்நூலை இயற்றிய சிறந்தஅகத்தியமுனிவர்க்கு ஆண்டுதோறும் சித்திரை மாதபிறப்பன்று நீ காட்டியருளிய உங்கள்திருமணக்கோலத்தை நான் எக்காலமும் காண்பேனோ. காணவியலாது.

**இலக்கணக்குறிப்பு** : காண்பேனோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது.

8. **துள்ளு மறிதிரைப்பார் சூழினும்உன் சூழல்நீர்**
**தள்ளும் அருவி தடாகமும்நான் காண்பேனோ**
**எள்ளும் அதில்நெய்யும் எனஎங்குநிறைந் தேபுறமும்**
**உள்ளுமா நின்றாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : துள்ளு மறி திரை= துள்ளிச்சுருண்டுவிழும் அலை. பார்சூழினும்= உலகைச் சூழ்ந்தபோதிலும். சூழல்= சூழ்ந்துள்ள. தள்ளும்= பொழியும். புறமும் உள்ளுமாய்= பொருளின் உள்ளும் வெளியிலும்.

**பொழிப்புரை** : எள்ளில்எங்கும் நிறைந்துள்ள எண்ணெய்போல் எவ்விடத்தும் நிறைந்து, பொருளின் உள்ளும் வெளியிலும் நிற்கும் உலகுடைய தாயே! துள்ளிச் சுருண்டுவிழும் கடல்அலைகள் இவ்வுலகைச் சூழ்ந்திருந்தாலும், உன்னைச் சூழ்ந்துள்ள அருவி, குளம் ஆகியவற்றை எங்கும்காணமுடியுமா?

9. **காடும் செடியும்ஐயோ கால்நடையே போய்த்திரிந்து**
**பாடும் கவலையும்என் பாழ்வினையும் தீராவோ**
**தோடும் குழையும்எட்டித் தொட்டுவிளை யாடிநடந்(து)**
**ஓடும் கயற்கண் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கால்நடையே போய்= நடந்துபோய். பாடும்= துன்பப்படுதலும். வினை= ஊழ். எட்டி= அருகில்சென்று.

**பொழிப்புரை** : தோட்டினையும், குழையையும் அவற்றின் அருகில்போய்த் தொட்டுவிளையாடி வரும்வகையில் பாயும் கெண்டைமீனொத்த கண்களுடைய உலகுடைய தாயே! காடு,செடி இவைஅடர்ந்த இடங்களிலெல்லாம் நடந்துபோய்த் திரிந்து நான்படும் துன்பமும் கவலையும் இவற்றுக்குக் காரணமான என் ஊழ்வினையும் உன்அருளால் தீரமாட்டாவோ ? தீர்த்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : காடும் செடியும் வினையும் - எண்ணும்மைகள். பாழ்வினை -வினைத்தொகை. கயற்கண்= உவமத்தொகை.

10. **காலைப் பொழு(து)எழுந்து காமர்மலை யத்(து)அருவி**
**மாலைப் புனல்படிந்து வந்(து)உனையும் காண்பேனோ**
**மேலைக் கடவுள் விலைஎழுதும் சாசனப்பொன்**
**ஓலைக் குழையாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : காமர்= அழகு, மாலைஅருவி= மாலைபோல் இறங்கும் அருவி. படிந்து= நீராடி. மேலைக்கடவுள்= அனைவர்க்கும் மேலான சிவபிரான். வில் ஐ எழுதும்= ஒளியுடன் தீட்டிய. சாசனம்= உரிமை.

**பொழிப்புரை** : அனைவர்க்கும் மேலான கடவுளாகிய சிவபிரான், ஒளிபொருந்த எழுதிய உரிமைஓலையாகிய பொன்னாலான ஓலை - காதணி அணிந்த உலகுடையதாயே! நான்காலையில் எழுந்து, பொதிகைமலைக்குச்சூட்டிய மாலைபோல் இறங்கும் அருவியில் நீராடிவந்து உன்னைக் கண்டுவணங்கும் பேறுபெறுவேனோ. அப்பேற்றினைஅருள்க.

**விளக்கம்** : ஓலை - காதணி. இதுமங்கலப்பொருள். இதனை உரிமைச்சாசனம் என்றதால் அம்மை என்றும் சுமங்கலை என்றார்.

11. **பைமருந்தும் வாகடநூல் பண்டிதனார் கொண்டுவந்த**
**கைமருந்தும் ஏதும்மஞ்சட் காப்புமருந்(து) ஒவ்வாதால்**
**செய்மருந்து பின்இடுமுன் தீர்த்தமருந்(து) உண்டுபிணிக்(கு)**
**உய்மருந்(து) உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பை= மேலான. வாகடம்= மருத்துவம். கைமருந்து= அனுபவத்தில் கண்ட மருந்து மஞ்சள் காப்பு= மஞ்சளில் நனைத்த காப்புநூல். செய்மருந்து ஒவ்வாது என்க. ஒவ்வாது= பொருந்தாது. செய்மருந்து= நிலத்தில் விளைந்த மருந்து. முன்பிணிக்குத் தீர்த்த மருந்து உண்டு= முன்பு ஆணவமாகிய நோய்தீர்த்த மருந்து உள்ளது. உய்மருந்து= தீர்க்கும்மருந்து. உண்டோ= வேறில்லை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! ஆணவமாகிய நோயைத் தீர்க்க, நிலத்தில் விளைந்த மேலான மருந்தும், மருத்துவ நூல்தேர்ந்த மருத்துவர் கொண்டுவந்த அனுபவமருந்தும், மஞ்சள்தோய்த்த உனது காப்புநூலாகிய மருந்துக்கு ஒப்பாகமாட்டா. இவற்றுக்கெல்லாம் முதலாவதாய் - மேலானதாய் அவ்வாணவநோய் தீர்த்தமருந்து நீயாக உள்ளாய். ஆணவநோய் தீர்த்தருள் என்றார்.

**விளக்கம்** : பைமருந்து முதலியன உடல்நோய் தீர்ப்பனவே. உயிர்நோயாகிய ஆணவத்தைத் தீர்ப்பது, திருவருள் ஒன்றே, பிறவல்ல என்றார்.

12. **காட்டு மருந்தும் கடைமருந்தும் கைசலிக்கக்**
**கூட்டு மருந்தும் குணமருந்(து)என் னார்உனையே**
**ஆட்டு மருந்துக்(கு)ஐம் புலன்அன்பே போல்உவகை**
**ஊட்டு மருந்(து)உண்டோ உலகுடைய மாதாவே.**

**விளக்கம்** : குணமருந்து என்னார்= குணம்தருமருந்து என்றுகூறார். ஆட்டு மருந்துக்கு= இயக்கும் அமுதமாகிய சிவபிரானுக்கு. ஐம்புலன் அன்பேபோல்= ஐம்புலன்களால் காட்டும் அன்புபோல் உவகையூட்டும்= மகிழ்ச்சிதந்து அருளச்செய்யும். உ.ண்டோ= வேறுஇல்லை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! காட்டில் பறித்துவரும் மூலிகை. கடையில் விற்கும் மருந்து, மூலிகைகளைக் கைசலிக்க அறைத்து ஒன்றுசேர்க்கும் மருந்து முதலியன பிறவிநோய் தீர்க்கும் மருந்து என்று கூறார். உன்னை இயக்கும் மருந்தாகிய சிவபிரானிடம், நம்ஐம்புலன்களாலும் காட்டும் அன்பாகிய மருந்துபோல் மகிழ்ச்சிதந்து பிறவிநோய் தீர்க்கும் மருந்து வேறில்லை.

**விளக்கம்** : சிவபிரானிடம் ஐம்புலன்களாலும் செலுத்தும் ஆற்றல் மிக்கஅன்பே - பத்திமையே பிறவிப்பிணிக்கு மருந்தாக மாணிக்கவாசகர் கூறுவன :

" சிந்தனைநின் தனக்குஆக்கி நாயி னேன்தன்
கண்ணினைநின் திருப்பாதப்போதுக்கு ஆக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
மணிவார்த்தைக்கு ஆக்கிஐம் புலன்கள் ஆர
வந்து எனைஉள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே இரண்டும்இலித் தமிய னேற்கே " ( திருவாசகம் 30 )

" ஆமாறுஉன் திருவடிக்கே அகம்குழையேன் அன்புஉருகேன்
பூமாலை புனந்துஏத்தேன் புகழ்ந்து உரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. " ( திருவாசகம் 18 )

13. **பன்உதரமோ வாயுப்பற்றி வலித்(து)ஈர்த்(து)அலந்தால்**
**என்உதரம் வேறே இருப்பதா மோஉரையாய்**
**மன்னுதரம் மாறுடைய மைந்தர்இரு பேர்ஐஅருள்**
**உன்னுதரம் வேறோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பன் உதரம்= ஆராயுங்கால் வயிறு. வலித்து ஈர்த்து அலைத்தால்= வலியெடுத்து, உள்ளே இழுத்துத் துன்புறுத்தினால். வேறே இருப்பதாமோ= வலிக்காத வேறுவயிறில்லை. மன் உதரம்= பெருமைபொருந்திய உடம்பு. மாறுடைய மைந்தர் இருபேர்= வெவ்வேறாகவுடைய மகன்களாகிய விநாயகர் முருகன்ஆகிய இருவர். ஐ= தலைவனாகிய சிவபிரான். அருள் உன்னு தரம்= அருட்சத்தியாகிய உனது தகுதிகள். வேறோ= வேறல்ல - கருணையாகிய ஒன்றேயாகும்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! பெருமை பொருந்திய உடம்புகளால் வேறுபாடுடைய உனது இருமக்களாகிய விநாயகர், முருகன் ஆகியோர் தகுதி, உன்தலைவனாகிய சிவபிரான் தகுதி அருட்சத்தியாம் உன்தகுதி ஆகிய அனைத்தும் கருணையின் வடிவேயல்லவா!! ஆராயுங்கால் வயிற்றை வாயுவானது பற்றிக்கொண்டு வலிஎடுத்தும் உள்ளிழுத்தும் துன்பம்செய்தால் வாயுவால் வலிக்காத வேறு வயிறுஎனக்கில்லை. கருணையாம் தகுதியுடைய நீ கருணைகாட்டுக.

14. **ஆர்மருந்தும் வேண்டேன்நீ ஆடும்அபி டேகமஞ்சள்**
**நீர்மருந்து பாழ்ம்பிணியை நீக்குமருந்(து) ஆகாதோ**
**வேர்மருந்தும் பச்சிலையும் மெய்மருந்தாம் கைமருந்தும்**
**ஓர்மருந்தும் ஏனோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பாழ்ம்பிணி= பிறவிப்பிணி. மெய்மருந்து= சிறந்தமருந்து. ஓர்மருந்து= வேறுஓர் மருந்து. ஏன்= தேவையில்லை - வேண்டாம்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! வேராகியமருந்து, பச்சிலையாகியமருந்து, சிறந்தமருந்தாகிய அனுபவமருந்து, இவையல்லாத பிறமருந்தும் யார்மருந்தும்என்பாழான பிறவிப்பிணியைத் தீர்க்கமாட்டா - வேண்டாம். நீ திருமுழுக்காடிய மஞ்சள்நீர்ஆகிய மருந்தே என்பிறவிப்பிணியைத் தீர்க்கும்.

**இலக்கணக்குறிப்பு** : வேர்மருந்தும் பச்சிலையும் கைமருந்தும் ஓர்மருந்தும் - எண்ணும்மைகள். ஏனோ - தெரிநிலை ஓகாரம்.

15. **வண்(டு)இருந்(து)ஆர் கூந்தல் மலைமருந்தாம் உன்னையும்உட்**
**கொண்டிருந்தும் மாயக் கொடும்பிணிக்(கு) உள்ளாவேனோ**
**பண்(டு)இருந்தார்க் குள்ளே பசித்தபசி பாலமிர்தம்**
**உண்(டு)இருந்தார்க்(கு) உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மலைமருந்து= இமயத்தில் தோன்றிவளர்ந்த பார்வதிதேவி. உட்கொண்டிருந்தும்= மனத்தில் கொண்டிருந்தும். மாயக் கொடும்பிணி= வஞ்சனையான கொடிய பிறவிப்பிணி. பசித்தபசி= பசித்தபசியின்பொருட்டு. பால் அமிர்தம்= உன்திருமுலைப்பால் ஆகிய அமுது. உண்டிருந்தார்= உண்டு வாழ்ந்த திருஞானசம்பந்தர். உண்டோ= பிறவிநோய் உண்டோ - இல்லை

**பொழிப்புரை** : உலகுடைய தாயே!முன்னாளில் வாழ்ந்தோருள் தனது பசிதீர்தற்பொருட்டு உனது திருமுலைப்பால் ஆகிய அமுதுட்கொண்ட திருஞானசம்பந்தர்க்குப் பிறவிப்பிணி இல்லை. ஆனால் வண்டுகள் மொய்த்து ஆரவாரிக்கும் மலர்சூடிய கூந்தலுடையவளே! மலையில் தோன்றிய மருந்தாகியஉன்னையே நான் மனத்தினுட்கொண்டிருந்தும் நான் வஞ்சனயான பிறவிப்பிணிக்கு உள்ளாவேனோ !

**விளக்கம்** : உன்திருமுலைப்பால் மட்டும் உட்கொண்டவர்க்குப் பிறவிப்பிணி இல்லை. ஆனால் உன்னையே உட்கொண்டுள்ள எனக்குப் பிறவிப்பிணி உண்டோ என்பது நயம்.

**இலக்கணக்குறிப்பு** : பண்டுஇருந்தார், உண்டுஇருந்தார் - வினையாலணையும் பெயர்கள். உண்டோ - இருதிணை ஐம்பால் மூவிடப்பொதுவினை.

16. **பாமரனென் சொல்வேன் ஓர் பச்சிலையும் தீர்த்திடும்உன்**
**காமர்அபி டேகமஞ்சள் காப்பினுக்குத் தீராதோ**
**நீமரபி னோடுமஞ்சள் நீர்குளித்து நோன்பிருந்த(து)**
**ஊமர் கனவன்றோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தீர்த்திடும்= உடல்நோய் தீர்க்கும். காமர்= அனைவரும் விரும்பும். தீராதோ= தீரும். மரபினோடு= முறைப்படி. நோன்பிருந்தது= விரதம் காத்தது. ஊமன் கனவு= வெளிப்படுத்த இயலாதசெயல்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உயிர்க்குலநலன்குறித்து நீ முறைப்படி மஞ்சள்நீராடி, நோன்பு மேற்கொண்டதை யாரால் வெளிப்படுத்த இயலும். அதுவெளிப்படுத்த இயலாத ஊமன்கண்டகனவு ஒத்தது, அறிவில்லாத நான்என்னசொல்ல உள்ளது! பச்சிலைமருந்தால் தீரும்உடல்நோய், அனைவரும் விரும்பும் உன்அபிடேகமஞ்சள் நீரால் தீராதோ - தீரும்.

**விளக்கம்** : பராசத்தி, உயிர்க்குலநலன்பொருட்டு விரதம்காக்கும் மரபு, சமயபுரத்தாளாகிய அருள்தரு மாரிஅம்மனின் திருக்கோயில் நடைமுறையிலும் உண்டு.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

17. **பண்டிதரே வாரும் பரிகாரம் பாரும்வெகு**
**கண்டிதமாய் நோய்க்(கு)உமது கைம்மருந்து தாரும்என்றே**
**கொண்(டு)இதனால் தீரும்என்(று)உட் கொண்டமருந்(து) எத்தனையோ**
**உண்டும்இதம் நான்காணேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கண்டிதம்= கண்டிப்பு. கைம்மருந்து= அனுபவமருந்து. கொண்டு= எண்ணி. உண்டும்= சாப்பிட்டும். இதம்= நலம்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான் மருத்துவரை அழைத்து, என்நோயைக்கண்டிப்பாகத் தீர்க்க உமது அனுபவமருந்துதாருங்கள் என்று கேட்டுப்பெற்று உண்ட மருந்துகள்மிகப்பல. ஆயினும்நான் நலம்பெறவில்லை. நலம்அருள்க.

18. **முன்குறைய தாக முதுக்குறை(வு) இல்லார்இகழப்**
**பின்குறைதான் பட்ட பெருங்குறைதான் போதாதோ**
**என்குறைஇ(து) என்னார் இனிக்குறைதான் வந்தால்முழுதும்**
**உன்குறைஇ(து) என்பார் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : உலகுடைய தாயே! முன்குறையதாக= நல்வினைப்பயனின்மையின் முன்னைய குறையாக. முதுக்குறைவு= பேரறிவு. பின்குறை= பின்னரும் நல்வினைப்பனின்மையால் பெற்ற குறைவு. என்குறை இது என்னார்= இதுஎன்னால் வந்த தீயூழ் என்றுகூறமாட்டார். உன்குறைஇது= உன்அருளின்மை-யால் ஏற்பட்ட குறை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! என்துன்பங்களுக்கு, நல்வினைப்பயனின்மையின் முன்னைய குறையாக காரணமாகப் பேரறிவு இல்லாதார் என்னை இகழ்வர்., பின்னார்நான் பெற்ற பெருங்குறைகள் - துன்பங்கள் மிகப்பலவாகும். இத்துன்பங்களுக்குக்காரணம், இப்போதைய நல்வினைப்பயனின்மையே என்றும் கூறுவார்கள். நான் இப்போது உன்னைச்சரணடைந்துவிட்டதால் இனிஏதும் துன்பம் வந்தால் அதற்குக் காரணம் நீ அருளாமையே என்று உன்னைக்குறைகூறுவர். அப்பழி உனக்கு நேராதிருக்க எனக்கு இனிமேலாவது அருள்க.

**விளக்கம்** : “ சார்ந்தாரைக்காத்தல் தலைவர்கடன் “ என்பது சிவஞானபோத உதாரணவெண்பா ஆதலின், உன்னைச்சரணடைந்த என்னை நீ காவாதுகைவிட்டால் அதுஉன்குறைஎன்று உன்னைப்பழிப்பர் ஆதலின் இனியாவது காத்தருள் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : முழுதும் - உம்மை முற்றும்மை. இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

19. **தப்புவிப்பாய் நோயைஎன்னைத் தாவிப்பாய் சற்குருவாய்ச்**
**செப்புவிப்பாய் ஞானம் தெளிவிப்பாய் என்(று)இருந்தேன்**
**இப்புவிப்பால் வேறுபட்டது என்குறைஎன் றார்ஆருக்(கு)**
**ஒப்புவிப்பாய் அம்ம உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தப்புவிப்பாய்= விடுவிப்பாய். தாவிப்பாய்= நன்னிலையில் இருத்துவாய். சற்குருவாய் = ஞானகுருவாக. இப்புவிப்பால் = இவ்வுலகில். வேறுபட்டது= உன் அருளாமையை. என்குறைஎன்றார் ஆருக்கு= என்குறையே காரணம் என்றுகூறிய யாருக்கு. ஒப்புவிப்பாய்= கூறுவாய்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! என்னைப்பற்றிய நோயிலிருந்து என்னை விடுவிப்பாய், நன்னிலையில் இருத்துவாய், ஞானம் உபதேசிக்கும் குருவாய் அஞ்ஞானத்திலிருந்து தெளிவு தருவாய் என்று வாழ்கின்றேன். இவ்வுலகில் நீ அருளாது வேறுபட்டமைக்குக்காரணம் என்குறையே என்று கூறியயாருக்கு உன்நிலையைக்கூறுவாய்.

**இலக்கணக்குறிப்பு** : அம்ம- அசைச்சொல்.

20. **இத்தரம்நின்(று) ஓராயிரம் தரம்நொந்தேன் உனைநான்**
**பத்தரம்என் றாலும்மனப் பாழ்இரும்பு தேயாதால்**
**தத்தரம்என்(று) ஓடிவரும் சண்டனுக்(கு)உன் தொண்டன்அப்போ(து)**
**உத்தரம்என் சொல்வேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : இத்தரம்= இந்நிலையில். பத்தரம்= மலை. தத்தரம்= மிகவிரைந்து. சண்டன்= யமன். உத்தரம்= விடை - பதில்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! இந்நிலையில் ஆயிரம்முறை உன்னை நொந்து கொண்டேன். உன்னைநான் மலைபோல்நம்பினாலும் பாழான இரும்புபோல்மனம் தேயாது - பக்குவப்படாது. அப்போது என்னைநோக்கி மிகவிரைந்து ஓடிவரும் யமனுக்கு என்னமறுமொழி கூறுவேன்!

**இலக்கணக்குறிப்பு** : மனப்பாழ் இரும்பு - உருவகம்.

21. **காகபலம் அங்(கு)ஓர் கதலிபலம் ஆகா(து)என்**
**போகபலன் மெய்யடியார் போக்கியபலன் போலாமோ**
**ஆகபல சொல்லிஎன் ஆவ(து)அடி யேன்பிறந்த**
**யோகபலன் நன்றாச்(சு) உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : காகபலம்= எலுமிச்சம்பழம். கதலிபலம்= வாழைப்பழம் போக்கியபலன்= அனுபவித்த பலன்.பிறந்த யோகபலன்= நேரத்தின் பலன். நன்றாச்சு= நன்குவிளைந்தது ( இகழ்ச்சிக்குறிப்புபற்றியது )

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! எலுமிச்சம்பழம் எந்நாளும் வாழைப்பழம் ஆகாது. அதுபோல் என்யோகபலன் மெய்யடியாரின் அனுபவபலன் ஆகாது. இவ்வாறாகப் பலவாறு சொல்லிப் பலன்என்ன! நான்பிறந்த தீயநேரத்தின்பலன் நன்றாக விளைந்துள்ளது.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

22. **நீர்க்குமிழி வாழ்வை நிலைக்கும்இ(து) என்றுநெடும்**
**பார்க்குள் இருந்(து)ஏதோ பழிக்குள்அகப் பட்டேன்நான்**
**ஆர்க்குள்எனை ஒப்பிடுவ(து) அம்மா உனைநம்பி**
**னோர்க்(கு)உள அம்மானே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நிலைக்கும்= அழியாதிருக்கும். பார்= உலகு. அம்மானே= அழகிய மான்போன்றவளே.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உன்னை நம்பினோர்த்க்குத் தலைவியே!! நீர்க்குமிழிபோல் நிலையில்லாத வாழ்வை நிலைத்தது என்றுஎண்ணிப் . பேருலகில் வாழ்ந்து ஏதோ பழிப்பட்டேன். என்னையாருக்கு ஒப்பிடுவது தாயே! அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

23. **என்நிமித்தம் நீஇரங்கல் ஏன்நிமித்தம் பார்ப்ப(து)எந்தத்**
**துன்நிமித் மேனும் சுபநிமித்தம் ஆகாதோ**
**நன்நிமித்தம் ஆக்கிஎன்னை நாளும்இத்த னைக்((கு)உயர்த்த(து)**
**உன்நிமித்தம் அன்றோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : என்நிமித்தம் நீ இரங்கல்பார்ப்பது ஏன் என்க. என்நிமித்தம்= என்பொருட்டு. நிமித்தம் பார்ப்பது ஏன்= நல்லநேரம் பார்க்கும் காரணம் என்ன. துன்நிமித்தம்= கெட்டநேரம். நாளும்= நாடோறும். உன்நிமித்தம் அன்றோ= உன் அருள் காரணமாகவல்லவா.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நீ என்பொருட்டு அருள்புரிய நல்லநேரம் பார்ப்பது ஏன்? எத்தகைய கெட்டநேரமாயினும் உன்அருளால் நல்லநேரம் ஆய்விடுமல்லவா? நல்ல நேரங்களை நாடோறும் உண்டாக்கி என்னை இந்தஅளவு உயர்த்தியது உன்னருள் அல்லவா!

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

24. **பொன்னைநொந்து கொண்டால்அப் பொன்வருமோ முன்னைவினை**
**தன்னைநொந்து கொண்டால்அத் தன்மைநன்மை ஆயிடுமோ**
**என்னைநொந்து கொள்கிலேன்நான் இன்பம்வரின் துன்பம்வரின்**
**உன்னைநொந்து கொள்வேன் உலகுடைய மாதாவே** .

**குறிப்புரை** : பொன்னை நொந்துகொள்வதனால் அப்பொன் வராது. முன்பு நான்செய்தவினையை நொந்துகொள்வதன்மூலம் அது நன்மைதருமா ? இன்பம் வந்தால் என்னைநான் நொந்து கொள்ளவில்லை. ஆனால் துன்பம்வரின் உன்னைத்தான் நொந்துகொள்வேன்.

**இலக்கணக்குறிப்பு** : வருமோ, ஆயிடுமோ - ஓகாரங்கள் எதிர்மறைப்பொருளன.

25. **கைப்புக்கொ டா(து)இனிப்புக் காதல்கொடா வெம்காலன்**
**வெப்புக்கோ டாரிகொண்டு வெட்டிடினும் பட்டிடலாம்**
**தப்புக்கொ டாதகலிச் சண்டாளன் கையில்எனை**
**ஒப்புக்கொ டாதேஉ லகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கைப்புக்கொடாது= வெறுக்காமல். இனிப்புக்காதல் கொடா= இனிய அன்புகொடுக்காத. வெப்புக்கோடடாரியால்= வெப்பு= துன்பம். பட்டிடலாம்= சாகலாம். தப்புக்கொடாத= தவறியும் தவறு செய்யாத. கலிச்சண்டாளன்= துன்பமாகிய மிகக் கொடியவன். ஒப்புக்கொடாதே= ஒப்படைக்காதே.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! வெறுப்புக்காட்டாமலும், இனியஅன்பு காட்டாமலும் கொடிய யமன் துன்பம்தரும் துன்பத்தைக் கோடாரியால் வெட்டினாலும் சாகலாம். ஆனால் தவறியும் பிழைசெய்யாத ஊழ்ஆகிய துன்பம்தரும் கொடியவன்கையில் என்னை ஒப்படைத்துவிடாதே.

**விளக்கம்** : சாதலினும் கொடியது ஊழ்த்துன்பம் என்றார். சாவு ஒருமுறை அப்போதுமட்டுமே துன்பம்தருவது. ஊழ்வினை வாழ்நாள் முழுதும் அனுபவிக்கவேண்டிய நிலையினது. “ நிழல்தன்னை வீயாது அடியுறைவது போன்றது ஊழ் ” என்பார் திருவள்ளுவர்.

26. **தப்புமிக்கும் ஒவ்வாத தன்மையரைப் புன்மையினான்**
**துப்புமிக்கும் ஒப்பெனும் வாய்ச்சொல்லும் வேளாம்எனவே**
**செப்பும்இக் குரோதமிடி தீர்ந்(து)உனையே வாழ்த்தில் எனக்(கு)**
**ஒப்பும்மிக்கும் உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தப்புமிக்கும்= பிழைமிகுந்த. ஒவ்வாத= பொருந்தாத. புன்மையில் = அற்பமான குணத்தால். துப்புமிக்கும் ஒப்பு= பவளமேமிகவுமொக்கும். வேளாம்= விரும்பேன், குரோதம்= பகை. மிடி= வறுமை. ஒப்பும் மிக்கும் உண்டோ= ஒப்பாரும் மிக்காரும் உண்டோ - இல்லை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! பிழைமிகுந்ததால் பிறரைப்பொருந்தாதவரை, நான்அவர்களின் அற்பமான குணத்தால், பவளம்ஒத்த உதடுகளுடைய அவர்கள் வாயால்சொல்லும் சொல்லையும் விரும்பேன். எனவே உலகவர் கூறும் பகை, வறுமையின்றி உன்னையே வாழ்த்தினால் என்னை ஒப்பாரும் மிக்காரும் உண்டோ - இல்லை.

**இலக்கணக்குறிப்பு** : வேளாம் - வேள் + ஆ +ஆம் - எதிர்மறை இடைநிலையாகிய ஆகாரம் புணர்ந்துகெட்டது ∴ எதிர்ர்மறைத் தன்மைப்பன்மை வினைமுற்று.

27. **தீராரோ கம்பெறினும் தீர்ப்பவரும் தாயர்முகம்**
**பாராரோ பிள்ளை பசித்(து)அழுது சோர்ந்த(து)என்றால்**
**ஆராரோ என்றுதொட்டில் ஆட்டிஅமு தூட்டுவதும்**
**ஊராரோ சொல்லாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தீராரோகம்= தீராத நோய். தீர்ப்ப வரும்= தீர்க்கும்பொருட்டுவரும். முகம்= பிள்ளையின் முகத்தை. அமுதூட்டி ஆராரோஎன்று தொட்டில் ஆட்டி என்க. ஊராரோ= பிறரோ - தாயாகிய நீயேதான்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! குழந்தை தீராதநோய்பெற்றபோது அதைத்தீர்க்க வருகின்ற தாய்மார் பிள்ளையின் முகத்தை பார்க்கமாட்டாரோ. பிள்ளை பசியால்அழுது சோர்ந்தது என்றால் அதற்குப்பாலூட்டித் தொட்டிலில் இட்டு ஆராரோ பாடுவது ஊராரோ - பிறரோ? தாயாகிய நீதான் செய்யவேண்டும். அருள்க.

**விளக்கம்** : தன்னைக் குழந்தையாகவும் அருள்தரு உலகம்மையைத்ன் தாயாகவும் கூறினார்.

28. **வீரைவாய் வீழ்துரும்பாய் மெய்அலைவாய் அம்மைதிருப்**
**பேரைவாய் வாழ்த்திஎன்ன பேறுபெற்றாய் என்பாரேல்**
**ஆரைவாய் மூடுவது என்அம்மே உலைமூடி**
**ஊரைவாய் மூடாது உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வீரை= கடல். மெய்அலைவாய்= உடம்பாலும் அலைகின்றவனே. பேறு= நலம். உலைமூடி= கொதிக்கும் நீருலையின் மூடி. ஊரைவாய் மூடாது= ஊர்வாயை அடைக்காது.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! என்னைக்கடலில்விழுந்த துரும்பாக அலைகின்றவனே! அருள்தருஉலகம்மை பெயரை வாயால் கூறியதால் என்ன நலம் பெற்றாய் என்று ஊரார்கேட்டால் அவர்வாயினை என்னகூறி மூடுவது ? உலைமூடியாகிய என்சொல் ஊர்வாயை மூடாது. நீஎனக்கு அருளுவதொன்றே ஊர்வாயை மூடும்செயலாகும். அருள்க.

**விளக்கம்** : “ உலைவாயை மூடலாம் ஊர்வாயை மூடவியலாது “ என்றபழமொழியை உட்கொண்டு, ஊர்வாயை மூட உன்அருள்வேண்டும். அருள்க என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

29. **நாருடைய புன்மைமலர் நன்றுடைமை ஆக்கும்எனக்(கு)**
**ஆருடையார் நான்உன் அருளுடையேன் ஆவேனோ**
**காருடைய விண்பிளக்கும் காவுடைய சிங்கைஎனும்**
**ஊருடைய பொன்னே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நார்= ( மலர்க்காம்பில் உள்ள ) துளை + அன்பு. நன்றுடைமை ஆக்கும்= நல்லமலர்மாலையாக அமைக்கும். ஆர் உடையார்= என்னை ஆதரிப்பார் யார். விண்பிளக்கும்= உயரத்தால்வானத்தைப் பிளக்கும்.

**பொழிப்புரை** : மேகம் தவழும் வானத்தைப் பிளந்து வளர்ந்த சோலைகளுடைய சிங்கையில் உள்ளபொன்னொத்தவளே! தாயே! துளையுடைய காம்போடுகூடிய மலர், மாலையாகக் கட்டப்பெறும். ஆனால் நார் - அன்பு இல்லாத என்னை ஆதரிப்பார் யார்? இந்நிலையில் நான் உனது அருளுக்கு உரியவன் ஆவது எப்படி? அன்பினை அளித்தருள்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் வேற்றுப்பொருள் வைப்புஅணி. விண்பிளக்கும் கா என்றது உயர்வுநவிற்சியணி.

30. **நச்சிச் சுடர்விடுத்தார் அச்(சு)அடமேல் மூச்(சு)அடக்கில்**
**சிச்சிச் சுடலையிட்ட தீப்பிறவி தீராதோ**
**துச்சில் சடஉழுவைத் தூசர்கயி லாசமலை**
**உச்சிச் சுடரே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நச்சி= விரும்பி. சுடர் விடுத்தார்= சூரியன் சந்திரன் ஆகியவற்றின் ஒளிதந்த சிவபிரான். அச்சு அட= ( நம் ) உடம்பைச்சுட. மூச்சு அடக்கில்= மூச்சினை - உயிர்ப்பை நிறுத்தினால். சிச்சி= *சீச்சீ* - இழிந்த. சுடலைத் தீயிட்ட பிறவி= சுடுகாட்டுத் தீயில் இட்ட உடம்பு. உழுவைச் சட துச்சில்= புலியின் அறிவற்ற துச்சிலாகிய உடம்புத்தோலை. தூசர்= ஆடையாக உடுத்த சிவபிரான். சுடரே= சுடராக விளங்குகிறவளே.

**பொழிப்புரை** : புலியின் அறிவற்ற தோலை ஆடையாக உடுத்தசிவபிரானுடன் கயிலைமலையின் உச்சியில் விளங்கும் சுடரே! உலகுடைய தாயே! உயிர்களின் வாழ்வினை விரும்பி ஞாயிறு திங்கள் ஆகியவற்றை ஒளிரச்செய்த சிவபிரான், இந்த உடம்பைச்சுட, மூச்சுக்காற்றை - உயிர்பைநிறுததினால் இழிந்த இவ்வுடம்பு சுடுகாட்டுத்தீக்குத்தான் ஆகும். ( அதன்முன் அருள் என்பது குறிப்பேச்சம் )

**இலக்கணக்குறிப்பு** : சுடர் - தானியாகுபெயர். சிச்சி - எதுகை நோக்கிய செய்யுள் விகாரம். மலை உச்சிச் சுடர் - உருவகம்.

31. **கன்று மறிபோல்குதித்(து)உன் காதின் மறித்(து)ஓட முக்கண்**
**குன்றும் அறி வும் கடுவும் கூர்விழியின் பார்வையினால்**
**என்றும் அறிஞோர்அறிவ(து) எத்தனையோ அத்தனையில்**
**ஒன்றும் அறியேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கன்றுமறி= கன்றுக்குட்டி. உன்கூர்விழி பார்வையினால் கன்றுமறி போல்குதித்துக் காதின் மறித்து ஓட என்க. மறித்து ஓட= குறுக்கிட்டு ஓட. முக்கண் அறிவும் நஞ்சும் குன்றும் என்க. கடு= நஞ்சு.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உன்கூர்மையானகண், பார்வைஇளமான்கன்றுபோல் குதித்துக் காதினைக்குறுக்கிட்டு ஓட, அதனால் முக்கண்ணனாகிய சிவபிரானின் அறிவும் நஞ்சின் ஆற்றலும் குன்றும் என்று அறிஞர்கள் அறிந்து கூறுவன மிகப்பலசெய்திகள். அவற்றுள் எந்தஒன்றுபற்றியும் நான் அறியேன். நின்பார்வையால் எனக்கும் அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

32. **புக்(கு)அலைவேன் அங்கும்இங்கும் பொய்க்கலைநூல் சொல்லிவெறிக்**
**குக்கலைநேர் வார்க்(கு)இதமே கூய்க்கலைவேன் கொள்கைஎன்னோ**
**மிக்கலைநூல் முத்துஒளிரும் மேகலைசூழ் வெற்(பு)அரசி**
**ஒக்கலைமேல் பிள்ளாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அங்கும் இங்கும் புக்குஅலைவேன். கலைநூல் பொய்சொல்லி= கலைகள்பற்றிய நூல்கள் சொல்வதாகப் பொய்சொல்லி. கூய் வெறிக் குக்கலை நேர்வார்க்கு இதமேசொல்லிக் கலைவேன் கொள்கை என்னோ. கூய்= கூவிஅழைத்து. வெறிக்குக்கல்= வெறிபிடித்தநாய். இதமே சொல்லி=மனம்மகிழக் கூறி. கலைவேன்= பிரிவேன். கலைநூல் மிக்கு ஒளிரும் முத்து ஒளிரும்= கலைநூல்களில் மிகுதியாக ஒளிரும் கருத்துப்போன்ற முத்துகள் ஒளிரும். வெற்பரசி= இமயமலைஅரசி - மேனை. ஒக்கல- இடுப்பு. பிள்ளாய்= குழந்தையே.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே!கலைநூல்களில் மிகுதியாக ஒளிரும் கருத்துப்போன்ற முத்துகள் ஒளிவீசும் மேகலை அணிந்த இமயத்து அரசி மேனையின் இடுப்பில் அமர்ந்த குழந்தையே! உலகுடைய தாயே! அங்கும் இங்கும் மிகுதியாக அலையும்நான், வெறிபிடித்த நாய்ஒத்தவர்க்கு, கலைகள் பற்றிய நூல்கள் கூறுவதாக அவர்மனம் மகிழப்பொய்கூறிப் பிரிவேன். என்கொள்கை எத்தகையது! மிகஇழிந்தது

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில் முன்னது உவமையணி, பின்னது எடுத்துகாட்டுவமையணி

33. **ஈட்டியதுக் காகஅங்கும் இங்கும்எனைக் காட்டிவம்பில்**
**ஆட்டிஅலைத் தாய்இனிநான் ஆடினதும் போதாதோ**
**காட்டி மறைத்(து) ஆருயிர்க்குக் கன்மபல போகம்எல்லாம்**
**ஊட்டிவைத்தாய் உண்டேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : ஈட்டியதுக்காக= வினைகளைச்செய்து குவித்ததற்காக. அங்கும் இங்கும்= எல்லாவிடங்களிலும். வம்பில் ஆட்டி அலைத்தாய்= வீணேஇயக்கித் துன்புறுத்தினாய். கன்மபல போகம் எல்லாம்காட்டி மறைத்து ஊட்டிவைத்தாய்= வினைப்பயனான அனுபவங்களை எல்லாம் வெளிப்படையாகக் காட்டியும் நான் அறியாதவாறு மறைத்தும். ஊட்டி வைத்தாய் உண்டேன்= அனுபவிக்கச் செய்தய் நான் அனுபவித்தேன்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான் வினைகளைச்செய்து குவித்ததற்காக எல்லாவிடங்களிலும் என்னை வீணேஇயக்கித் துன்புறுத்தினாய்! வினைப்பயனான அனுபவங்களை எல்லாம் இன்னவினைக்கு இதுஎன்றுவெளிப்படையாக உணர்த்தியும், உணர்த்தாமல் மறைத்தும் நான் அனுபவிக்கச் செய்தாய். நான் அனுபவித்தேன். இதுவரை ஆட்டிவைத்தது போதாதா ?

**விளக்கம்** : “ செய்வினை மருங்கில் உயிர்செலும் “ - மணிமேகலை.
“ ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே “ ( திருமுறை 6 தனித்திருத். 3 )

34. **செவ்வொன்றோ காண்பேன் செலவுஒன்றோ விம்மிவரத்**
**திவ்ஒன்றோ ஊழ்வினைதான் என்ப(து)ஒன்றோ ஆயிரமோ**
**அவ்வொன்றோ கோடிதத்(து)உண் டாக்கமனம் ஏக்கமுற்ற(து))**
**ஒவ்வொன்றோ கெட்டேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : செவ் ஒன்றோ காண்பேன்= நேர்மைமட்டுமா நான்காண்பேன். செலவு ஒன்றோ விம்மிவர = செல்லுமிடங்கள் ஒன்றல்லாமல் மேன்மேல்மிக. திவ் ஒன்றோ= உன்ஆணை ஒருபடித்தானதா. அவ்வொன்றோ= அந்தஒன்றுமட்டும். கோடிதத்து உண்டாக்க= கோடிக்கணக்கான பீடைகளை உண்டுபண்ண. மனம்ஏக்கமுற்றது ஒன்றோ= ஏங்கிய மனநிலை ஒன்றல்ல - மிகப்பல. கெட்டேன்= நிலையழிந்தேன்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நேர்மையை மட்டுமாநான் காண்பேன்; நான் செல்லுமிடம் ஒன்றல்ல; மிகப்பலவாகும்; இதற்கு உன்ஆணைமட்டுமா காரணம் ? என்ஊழ்வினை ஒன்றா? ஆயிரமா? அதுஒன்றே கோடிக்கணக்கான பீடைகளை உண்டாக்க, அதனால் மனம்ஏங்கியது ஒருமுறையல்ல, மிகப்பலமுறையாகும், அவ்ஏக்கத்தால் என்நிலையழிந்தேன். அருள்க.

35. **தின்னுடனே காலர் சினத்துடனே என்னைஉறத்**
**தன்னுடனே செல்வதற்குத் தாழ்க்கில்அவர் தாழ்வாரோ**
**என்னுடனே மாறுகொண்டோர் இங்(கு)இவர்என்(று) அங்(கு)அவரை**
**உன்னுடனே சொல்வேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : தின்னுடன்= தீமைசெய்யும் நோக்குடன். காலர்= யமதூதர். தாழ்க்கில் = காலம் தாழ்த்தினால். தாழ்வாரோ= பொறுப்பாரா. இவர்= இக்காலதூதர். உன்னுடனே= உனக்கு.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! தீமை செய்யும் - உயிர்கவரும் - நோக்குடன் யமதூதர் சினத்துடன் என்னையடைந்தால், நான் அவர்களுடன் செல்லக் காலம்தாழ்த்தால், அவர்கள் பொறுத்துக்கொள்வாரா! என்னை இங்கு விரோதித்தவர் இக்காலதூதர் என்று அப்போது உனக்குக் கூறுவேன். நீஎனக்கு அருள்க.

**விளக்கம்** : காலன் உரியகாலத்தில் வருவான், ஒரு நொடியும் தவறமாட்டான் என்பதை, “ ஒருகணம் தரியான் “ என்ற தொடரால் கபிலரகவல் குறிக்கும். .

**இலக்கணக்குறிப்பு** : காலர்- காரணப்பெயர். தாழ்வாரோ - ஓகாரம் எதிர்மறை. உன்னுடனே - உருபுமயக்கம்.

36. **புத்திஎன்ன வித்தைஎன்ன போதம்என்ன வேதமந்தர**
**சித்திஎன்ன இத்தனைக்கும் சேதம்என்ன வாராதோ**
**பத்திஎன்ன(து) என்னஒரு பான்மையிலே மேன்மைபெற**
**யுத்திஎன்ன சொல்லாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : புத்தி வித்தை போதம்= அறிவு கலை ஞானம். சித்தி= பயன். சேதம்= அழிவு. பத்தி என்பது என்ன= பத்திமை என்பதுயாது. பான்மையிலே= முறையில். மேன்மை= வீடுபேறு யுத்தி= தந்திரம்.

**பொழிப்புரை** : அறிவாயின் என்னபயன்? கலையாயின் என்னபயன்? ஞானமாயின் என்னபயன்? வேதம்கூறும் மந்திரமாயின் என்னபயன்? அனைத்தும் இறுதியில்அழியுமல்லவா? எனவேபத்திமைசெய்தல் என்றமுறையில் நான் வீடுபேறுபெற ஒரு தந்திரத்தை எனக்கு அருள்வாயாக.

**விளக்கம்** : அறிவாலும் பிறவற்றாலும் அடையமுடியாத வீடுபேற்றைப் பத்திமைதான் தரும் என்றார்.இதற்கு நாயன்மார் வரலாறே சான்றாகும்.

" பத்தர்கட்கு அருளும் வைத்தார் " ( திருமுறை 4/3. திருவையாறு 7. )

**இலக்கணக்குறிப்பு** : சொல்லாய் - முன்னிலை ஒருமைவினைமுற்று.

37. **விண்டால் பயன்ஏது விண்டபடி யேஉனையும்**
**கொண்டால் பிறவி கொடுத்தார் கொடுப்பாரோ**
**கண்டால் பசிபோமோ கையளவின் நெய்யிடுசோறு**
**உண்டால் பசிபோம் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : விண்டால்= அனுபவம்பற்றிக் கூறினால். விண்டபடியே கொண்டால்= சொன்னபடி உன்னை அனுபவித்தால். பிறவிகொடுத்தார்= நான்முகன். கொடுப்பாரோ= கொடார். கை= சிறிதளவு.

**பொழிப்புரை** : ஒன்றன் அனுபவம்பற்றிக் கூறக்கேட்டால் பயனில்லை. அவர்சொன்னபடி நான் திருவருளை அனுபவித்தால் எனக்குப் பிறப்புத்தந்த நான்முகன் இனி, பிறப்புத்தருவாரா? தரமாட்டார். சோற்றைக்கண்டால் பசிபோய்விடுமா? சிறிதளவு நெய்யிட்ட சோறுஉண்டால்மட்டுமே பசிபோகும். எனவே உன் அருளைச்சிறிது அருள்க.

**விளக்கம்** : உணவில் நெய் பெரிதளவாயின் கெடுதல்பல விளையுமாதலின் கையிடுநெய் என்றார்.

" நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்
ஆறில்லா ஊருக்(கு) அழகுபாழ் - பாரில்
உடன்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி இல்லா மனை. ( நல்வழி. 24 )

என்பதில் நெய்யினை, உண்டியின் முற்கூறியது சிறிதளவு எனற்பொருட்டே என்க.

38. **ஈட்டுவித்தாய் எவ்வினையும் ஈட்டினேன் (நான்என்றும்)**
**ஆட்டுவித்தாய் அப்படிநின்(று) ஆடினேன் என்குறையோ**
**காட்டுவித்தாய் கண்டதுஎல் லாம்கண்டேன்என் கன்மபலன்**
**ஊட்டுவித்தாய் உண்டேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அடைப்பில் உள்ள "நான் என்றும்" என்றதொடர் மூலத்தில் இல்லை. மூன்றுசீர்களே உள. எனவே தக்கவாறு" நான் என்றும் " என்பதைச் சேர்த்துள்ளேன் ). ஈட்டுவித்தாய்= சம்பாதிக்கச் செய்தாய். ஆட்டுவித்தாய்= இயங்கச்செய்தாய். ஆடினேன்= இயங்கினேன். என்குறையோ=என்மேல் குறையில்லை. காட்டுவித்தாய்= பார்க்கச்செய்தாய். கண்டது= நீ கண்டவற்றை எல்லாம். ஊட்டுவித்தாய்= அனுபவிக்கச்செய்தாய்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நீ வினைகளைச் சம்பாதிக்கச் செய்தாய்!, அதனால் எல்லா வினைகளையும் நான் சம்பாதித்தேன். என்றும் நீ என்னை இயக்கினாய்! நீ இயக்கியவழியில் நான் இயங்கினேன்! எனவே என்மீது எக்குறையும் இல்லை. நீ கண்டு எல்லாம் காணச்செய்தாய்! நான்கண்டேன்! என்வினைப்பயன் எல்லாவற்றையும் அனுபவிக்கச்செய்தாய்! நான் அனுபவித்தேன் எனவே என்மேல் எக்குறையும் இல்லை.

**விளக்கம்** : அனைத்தும் உன்செயலே என்செயலன்று என்ற இச்செய்யுளின் கருத்து,

" ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
அடங்குவித்தால் ஆரொருவர் அடங்காதா தாரே
ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே ( திருமுறை 6. தனித். 3).

என்பதன் பிழிவு. இதனை மிகச்சுருக்கமாக சிவஞான போதம் கண்டுகாட்டல் என்னும். அது;

" காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே " ( சிவஞான போதம் சூத். எண்11 )

என்பதாகும்.

39. **பார்வழிச்சென்(று) எத்தனையோ பாடினேன் பாதகர்தம்**
**பேர்வழியும் கேட்(டு)உருகப் பேச்(சு)உரைத்தேன் பேய்ச்சுரைக்காய்**
**தீர்வழியுண் டோகசப்புத் தீம்பால்விட்டு எதுபிழைப்பு**
**ஓர்வழியும் காணேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பார்வழி= உலகியலின்படி பாதகர் தம்பேர்வழியும்= பாதகராகிய அவர்களையும். பேச்சு உரைத்தேன் = புகழ்ந்துகூறினேன். தீம்பால்விட்டு பேய்ச்சுரைக்காய் கசப்புத்தீர்வழியும் உண்டோ= பேய்ச்சுரைக்காயில் இனியபால் ஊற்றினாலும் அதன் கசப்புக்குணம் தீரவழியில்லை. எது பிழைப்பு= நான்ஈடேறும் வழிஎதையும் காணவில்லை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உலகியலின்படிவாழ்ந்து, பாதகர்களை மிகவும் புகழ்ந்து பாடினேன், அவர்கள் மனம் உருகப்பேசினேன் ஆயினும் இனியபாலை ஊற்றினாலும் பேய்ச்சுரைக்காய் போன்ற அவர்களின் மனநிலை - கசப்புதீர வழிஇல்லை. நான் ஈடேறஒருவழியும் தெரியவில்லை.

**விளக்கம்** : பேய்ச்சுரைக்காயின் கசப்பைப் போக்க, இனிய பாலினை அதில்ஊற்றினாலும் அதன் கசப்புக்குணம் போகாததுபோல் பாதகர்களைபுகழ்ந்து பாடினாலும் அவர்கள் குணம்மாறி உதவவில்லை, எனக்கும் ஈடேற்றம் இல்லை என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமை அணி.

40. **பெத்தரிக்கத் தார்க்கிதமாய் பேசினும்என் பேச்சைஅவர்**
**கத்தரிக்கப் பார்ப்பர்அல்லால் காசுபணம் தாராரால்**
**வித்தரிக்கத் தேவையில்லை வீண்குடும்பம் தாங்கிஎன்னால்**
**உத்தரிக்கக் கூடாது உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பெத்தரிக்கம்= பெருமை. தார்க்கிதமாய்= தருக்கமுறையில். கத்தரிக்க= வெட்டிவிட. - நிறுத்த. வித்தரிக்க= விவரமாகக்கூற. உத்தரிக்கக் கூடாது= சகிக்க முடியவில்லை

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! பாதகர்களின் பெருமையைத் தருக்கமுறையில் அவர்களிடம் பேசினாலும் அவர்கள் என்பேச்சினை நிறுத்த முயல்வாரேதவிர கோசோ பணமோ எனக்குத்தரமாட்டார்கள்.

இதை உன்னிடம் விவரமாகக்கூற வேண்டாம். அதைநீ அறிவாய். வீணே என்குடும்பத்துன்பத்தைத் தாங்குவதை - பேணுவதை என்னால் சகிக்கமுடியவில்லை. நீயே அருள்க. .

**விளக்கம்** : பாதகர்களை எவ்வளவு புகழ்ந்தாலும் எதுவும் கிடைக்காது.என்பதைச்சுந்தரர் தமது திருப்புகலூர்ப் பதிகத்தில்;

" தம்மை யேபுகழ்ந்து இச்சை பேசினும்
சார்வி னும்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே " ( ! )
" மிடுக்கி லாதானை வீம னேவிறல்
விசய னேவில்லுக்கு இவன்என்று
கொடுக்கி லாதானைப் பாரி யேஎன்று
கூறி னும்கொடுப் பார்இலை " (. 2 )

மேலும் இப்பதிகத்தது 3 - 10 பாடல்களின் முதல்இரண்டு அடிகளில்இத்தகையோரைக்குறிக்கிறார்,

41. **சித்தமோகம் திமிர்ந்த தீவினையோ தீவினையாம்**
**அத்தமோ கம்புரிய அன்னதுமோ கித்த(து)என்ன**
**சத்தமோ வாருதிஎன் சாதமோ(டு) எட்டியதுதான்**
**யுத்தமோ சொல்லாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : சித்தமோகம்= கீர்த்தியில் பெருவிருப்பம். திமிர்ந்த= இறுமாந்த. அத்தமோ= காடோ. கம்புரிய= அறிவால் செயற்பட. அன்னது மோகித்ததுஎன்ன= அந்த அறிவு விரும்பியதுபோல். சத்தம்= ஆரவாரம். வாருதி= கடல். என்சாதமொடு= என்பிறப்புஉடன். யுத்தம்= வாழ்க்கைப்போராட்டம்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! என்பிறப்புடன் கூடியது; கீர்த்தியில் நான் பெருவிருப்பம் கொண்டதால் செய்த தீவினையோ, தீவினையாம் காடோ, அறிவு விரும்பியதுபோல் செய்ததால் வந்த கடல்போன்ற ஆரவாரமோ, வாழ்க்கைப்போராட்டமோ எதுவென்று கூறியருள்.

**விளக்கம்** : என்பிறவியோடு ஒட்டிவந்த இவற்றை நீயே அறிவாய். எனவே நீயே இவற்றைத் தீர்த்தருள்க என்பது குறிப்பு.

**இலக்கணக்குறிப்பு** : தீவினையோ, அத்தமோ, சத்தமோ, யுத்தமோ - ஓகாரங்கள் வினாப்பொருளன.

42. **வெள்ளம்அறி யாமல்வழீஇ வீழ்வதுபோல் வெவ்வினையின்**
**கள்ளம்அறி யாமல்மனம் கைகடந்து என்ஆமோ**
**துள்ளுமறி ஏந்தினற்கும் தோன்றா உனதுதிரு**
**உள்ளம் அறியேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வழீஇ= வழுக்கி. மனம் கைகடந்து= என்மனம் என்முயற்சியைக் கடந்து. என்ஆம்= என்னபயன். துள்ளுமறி= தாவிக்குதிக்கும் மான்கன்று. ஏந்தினர்= ஏந்திய சிவபிரான்.

**பொழிப்புரை** : தாவிக்குதிக்கும் மான்கன்றை ஏந்திய சிவபிரானாலும் அறிதற்கரிய உன்திருவுள்ளம் பற்றி, உலகுடைய தாயே நான் அறியேன். வெள்ளப்பெருக்கின் ஆற்றலை அறியாமல் வழுக்கிஅதில் வீழ்வதைப்போல், கொடிய வினையில் மறைந்துள்ள அதன்ஆற்றலை அறியாமல் என்மனம் எனது முயற்சியைக்கடந்து செயற்படுவதால் என்னபயன்?

**இலக்கணக்குறிப்பு** : வழீஇ - சொல்லிசையளபெடை. தோன்றா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஆமோ - ஓகாரம் அசைநிலை. இச்செய்யுள் உவமையணி.

43. **நன்றும் குறியேன் நயம்குறியாய் நின்(று)அதிலே**
**என்றும் குறியேன் இடரால் குறியேன்என்**
**பொன்றும் குறியால் புழுங்கினேன் போக்குவரத்து**
**ஒன்றும் குறியேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நன்று= நன்மை. குறியேன்= குறிக்கோளாகக் கொள்ளேன். நயம்= இனிமை. குறி= நோக்கம். குறியேன்= கொள்கையாகக் கொள்ளேன். குறியேன்= மனம் குறுகினேன். பொன்றும்குறி= அழியும் குறியால். புழுங்கினேன்= மனம் நொந்தேன். போக்குவரத்து= இறப்பு பிறப்பு. குறியேன்= எண்ணவில்லை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான் நன்மையைக் குறிக்கோளாகக் கொள்ளவில்லை; இனிமையானதையே நோக்கமாகக் கொண்டு அதை எந்நாளும் குறிக்கோளாகக்கொள்ளேன்; இவற்றால் மனம் குறுகினேன்; எனது அழியும் அறிகுறியால் மனம்நொந்தேன்; என்இறப்பு பிறப்புபற்றி எதையும் எண்ணவில்லை; என்செய்வேன்! எனக்கு அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலை அணி.

44. **முத்தாரம் அந்த முழுத்தார் வதனம்விம்ம**
**வித்தார மாமதிஉன் மேனிசெக்கர் மாலைஎன்றே**
**சித்தார விந்தம்வைத்த செல்வருக்கோ செல்கதிவீ(டு)**
**உத்தாரம் இட்டாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : முத்தாரம் முழுத்தார் அந்தவித்தார மாமதி வதனம் வித்தர மாமதி என்க. முத்தாரம் முழுத்தார்= முத்துமாலையாகிய நீண்டமாலை. விம்ம= மகிழ. வித்தாரம்= விரிவான - முழுமையான. மா= அழகு. செக்கர் மாலை= மாலைநேரச்செவ்வானம். சித்தஅரவிந்தம்= மனத்தாமரை. செல்வர்=அருட்செல்வர் - அடியவர். செல்கதி வீடு= சென்றடையும் பதவியாகிய வீடுபேறு. உத்தாரம் இட்டாய்= உத்தரவு அருளினாய்.

**பொழிப்புரை** : நீண்டமுத்துமாலையணிந்த அந்தஉனது முழுமையான நிலவுஆகிய அழகியமுகம் மகிழ, உன்திருமேனி மாலைநேரச் செவ்வானம் என்று தனது மனமாகிய தாமரையை உன்மேல் வைத்த அருட்செல்வமுடைய உன் அடியவர்க்காக, அவர்கள் சென்றடையவேண்டிய பதவியாகிய வீடுபேற்றை அருளினாய்.

**இலக்கணக்குறிப்பு** : வித்தார மாமதி வதனம் - உருவகம்.

45. **வைப்புரிய முந்நீர் வலம்புரியும் தொண்டர்அவர்**
**எப்புரிகை யாளர்இடம் புரிவிண்ணோர் இடம்காண்**
**வெற்(பு)இருக்கை யாளரொடு வேதவித்து நாதாந்தத்து**
**உப்பரிகை மேல்வாழ் உலகுடைய மாதவே.**

**குறிப்புரை** : வைப்பு= உலகம். முந்நீர்= கடல். வலம்புரி= வலம்புரிச்சங்கு. அவர் எப்புரிகையாளர்= அத்தொண்டரை எவ்வகையிலும் விரும்புவோர். புரி விண்ணோர்= உன்னைத் தெளிந்த தேவர்கள். இடம்காண் வெற்பு இருக்கையாளர்= உன்னைஇடப்பாகம் கொண்டு கயிலையில் இருக்கும் சிவபிரான். வேதவித்து= வேதம் கற்றவர். நாதாந்தத்து உப்பரிகை= நாததத்துவம்கடந்த உச்சி.

**பொழிப்புரை** : உலகைச்சூழ்ந்துள்ள கடலில் பிறக்கும் வலம்புரிச்சங்கு, அடியவர், அவர்களை எவ்வகையிலும் விரும்புவோர், உன்னைத்தெளிந்த தேவர்கள், உன்னை இடப்பாகம் கொண்டு கயிலையை இடமாகக்கொண்ட சிவபிரான், வேதம் கற்றவர், நாதத்த்துவம் கடந்தஉச்சியாகிய மேலிடம் என்று எங்கும் வாழ்கின்ற உலகுடையதாயே எனக்குஅருள்க.

**விளக்கம்** : ஆயிரம் இடம்புரிச்சங்குகள் சூழ்ந்தது வலம்புரிச்சங்கு என்பர் .முந்நீர் என்பதற்கு, மழைநீர், ஆற்றுநீர்,ஊற்றுநீர் என்பர்சிலர். அம்மூன்றும் மழைநீரில் அடக்கம் ஆதலின் அடியார்க்குநல்லார் தரும் “ படைத்தல், காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழிலும் வல்லகடல் “ என்பதே சாலப்பொருந்தும்.

46. **பிட்கில் பிளவுபடாப் பேதமைப்பட்டு ஏற்றகையை**
**முட்கிட்டி யின்எமனார் மோதுவர்அங் கேதாமோ**
**மட்கிப்பகல் மதிபோல் வாழ்ந்தவரை வாழ்த்திஇரந்துண்(டு)**
**உட்கித் திரிந்தேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பிட்கில் பிளவுபடாப் பேதைமை= பிளந்தாலும் பிளக்கவியலாத வலியஅறியாமை - தீர்க்கமுடியாத அறியாமை. ஏற்றகையை= கயவரிடம்யாசித்த கையை. முள்கிட்டி= முள்ளுடைய குறுந்தடி. அங்கேதாம்= நரகத்தில். பகல்மதிபோல் மட்கி= பகற்பொழுதில் காணப்படும் நிலாப்போல் புகழ்மங்கி. உட்கி= வெட்கப்பட்டு.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான் பிளந்துஅழிக்க முயன்றாலும் அழிக்கவியலா அறியாமை வசப்பட்டு, பகற்காலத்தில் ஒளிகுன்றிக்காணப்படும் நிலவுபோல் வாழும் கயவரை வாழ்த்தி அவர்களிடம் வெட்கப்பட்டு யாசித்துநீட்டித் திரிந்தஎன் கையை, யமதூதர் நரகத்தில் முட்களுடைய குறுந்தடியால் புடைப்பர். காத்தருள்க.

**விளக்கம்** : " ஈர்ங்கை விதிரார் கயவர் " ( திருக்குறள் 1077 ) ஆதலின் அவரிடம் யாசித்தலைப் பிளவுபடாப் பேதைமை என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : அங்கே தாமோ - ஓகாரம் அசைநிலை. இச்செய்யுள் உவமையணி.

47. **வம்பருக்(கு)உள் ளாய்ப்புறம்போய் வாடாமல் உன்கருணைச்**
**சொம்பருக்கு ஞானத்தொ ழும்பருக்(கு)உள் ஆவேனோ**
**நம்பருக்கும் ஆரணற்கும் நாரணற்கும் இம்பருக்கும்**
**உம்பருக்கும் வாழ்வே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வம்பர்= தீயோர். புறம்போய்= அறம்கடந்துபோய். சொம்பர்= அழகர். ஞானத்தொழும்பர்= ஞானமுடைய அடியவர். உள்ளாவேனோ= கூட்டத்தில் ஒருவனாவேனோ. நம்பர்= விரும்பத்தக்கவர். ஆரணர்= பிரமன். இம்பர்= இவ்வுலகினர். உம்பர்= தேவர்கள். வாழ்வே= வாழ்வுக்குக் காரணமானவளே.

**பொழிப்புரை** : விரும்பத்தக்கவர்க்கும், பிரமனுக்கும், திருமாலுக்கும், இவ்வுலகினர்க்கும், தேவர்கட்கும் அவர்களின் வாழ்வுப்பொருளாக உள்ளவளே! உலகுடைய தாயே! தீயவர் கூட்டத்தில் ஒருவனாகி, அறம்கடந்துபோய் நான்வாடாதபடி; உன்கருணையால்ஆன அழகர், ஞானமுடைய அடியவர் ஆகியோர் கூட்டத்தில் ஒருவனாவேனோ! என்னைஅங்ஙனம் ஆக்கியருள்க.

**விளக்கம்** : நல்வாழ்வுக்குப் பெரியாரைத் துணைக்கொள் என்பது உலகப்பொதுமறை. " அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய் " என்பார் வாதவூர் அண்ணல். இதனை உட்கொண்டு , " உன்கருணைச் சொம்பருக்கு, ஞானத்தொழும்பருக்கு உள்ளாவேனோ என்றார் .

**இலக்கணக்குறிப்பு** : நம்பருக்கும் ஆரணற்கும் ..................உம்பருக்கும் - உம்மைகள் எண்ணும்மைகள்.

48. **குன்றோ கடலோ குறித்தோ நெறித்(து)ஓடிச்**
. **சென்(று)ஓர் இடம்தேடிச் செல்வனென்று சொல்வதற்கே**
**இன்றோ உளதோமற்(று) எல்லாம்க டந்ததுதென்ப(து)**
**ஒன்றோ பலவோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நெறித்து= உரியவழியில். குன்றோ= குன்றிலுள்ளதா. கடலோ= கடலில் உள்ளதா. நெறித்துஓடிப்போய்= உரியவழியில் விரைந்து போய். செல்வன்= சென்றடைவேன்

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! எல்லாவற்றையும் கடந்தபொருள் ஒன்றுதானா பலவா ? அது குன்றிலுள்ளதா? கடலில் உள்ளதா? உரியவழியில் ஓடிப்போய் அது இருக்கும் இடம்பற்றிச்சொல்ல குறிப்பிட்ட இடத்தில் இல்லையா? உள்ளதா? கூறியருள்.

**விளக்கம்** : எல்லாம் கடந்தஒருபொருளை அடைவதற்கு அது குன்றில் கடலில் என்று ஓரிடத்தில் இல்லை. எங்கும் உள்ளது, நம் உள்ளத்திலிலும் உள்ளது என்றார்.

49. **குன்றுபடு வெங்கானில் கோடுபடா யானைகொப்பத்(து)**
**என்றுபடும் என்பார் எமபடருக்(கு) ஒப்பாரே**
**கன்றுபடு நோயைக் கரைத்திடிலோ சித்தம்எனக்கு**
**ஒன்றுபடும் அம்மே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : குன்றுபடு வெங்கானில்= குன்றுகளுடைய வெப்பம்மிக்க காட்டில். கோடுபடாயானை= தன்கூட்டத்துடன் சேர்ந்து வாழாதயானை. கொப்பத்து என்றுபடும்= எந்நாளில் அகப்படும். எமபடர்= யமதூதர். கன்றுபடுநோய்= முற்றிய ஆணவநோயை. கரைத்திடில்= வலி இழக்கச்செய்தால்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! மரங்கள் இல்லாத குன்றாகஉள்ள வெப்பம்மிக்ககாட்டில் தன்கூட்டத்துடன் சேராது வாழும் யானைஒன்று, எந்நாளில் அதனை அகப்படுத்தும் குழியில் அகப்படும் என்றுநினைப்பவர் யமதூதருக்கு ஒப்பாவார். எனவே முற்றிய ஆணவநோயை வலி இழக்கச்செய்தால்தான் என்மனம் எனக்கு வசப்படும்.

**விளக்கம்** : குன்றுபடு வெங்கான் என்றது உலகியலை. கோடுபடாயானை என்றது மனநிலை காரணமாக உலகியலுடன் ஒத்துப்போகாதவரை. கொப்பத்து என்றுபடும் என்றது உலகியலுடன் ஒத்துப்போகாநிலையை. கன்றுபடு நோய் என்றது ஒத்துப்போது ஆணவத்துடன்கூடித் தனித்துவாழும் நிலையை - அது ஆணவத்தால் வந்தது என்றார். கரைத்தல் என்பது ஆணவத்தின் கீழ்நோக்கிச்செலுத்தும் வலிமையை - அதோ நியாமிகாசத்தியை.. ஆணவத்தின் வலிமையைக் கரைத்தால் அது ஆன்மாவுக்கு இறைவன்தரும் இன்பத்தை ஊட்டஆன்மா இறைவனுடன் கலக்கும் என்றார். இதன்மூலம் ஆன்மாவின் கீழ்நோக்கிச் செலுத்தும் ஆற்றலைக் கரைத்தால் மட்டுமே ஆன்மா இறைவனுடன் கலக்குமென்றார்.

ஆன்மாவை உலகியலின்வழி - கீழ்நோக்கிச்செலுத்தும் ஆணவம்; முத்திநிலையை ஆன்மா அடையும்போது, ஆன்மாவுக்கு இறைதரும் பேரின்பதை மேன்மேலும் விளைவிக்கும். இதுபற்றி,

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு, - மெத்தவே
இன்பம்கொ டுத்தல்இறை, இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள்அப் பா " ( உண்மை விளக்கம் 50 )

என்று கூறும். ( மூன்றுமுதல்= பதி, பசு, பாசம். சுத்த அநுபோகம்= தூயபேரின்ப அனுபவம். அணு= ஆன்மா. இத்தை= இவ்வின்பத்தை. விளைவித்தல்= மேன்மேலும் பெருக்கித்தரல். மலம்= ஆணவம்.

50. **பெத்தர் இகந்தானேல் பெறுகதிஎன் பார்அதைஉன்**
**பத்தர் இகழ்ந்(து)ஏறாப் பரகதிசென்(று) ஏறுவரால்**
**அத்(து)அரி கண்சாத்தும்ஒரு நாயகர்கண் சாத்துதனத்(து)**
**உத்தரிகம் சாத்தும் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பெத்தர்= மும்மலக்கட்டுடையர். இகந்தானேல்= அதை ஒழித்தால். பெறுகதி= வீடுபேறு. அதை= மும்மலக்கட்டினை. இகழ்ந்து= வெறுத்து ஒதுக்கி. ஏறாப் பரகதி= பிறர் அடையாத வீடுபேறு. அரிகண்= தீக்கண். சாத்தும்= பார்க்கும். ஒருநாயகர் ஒப்பற்ற தலைவர்ஆகிய சிவபிரான். கண்சாத்து தனத்து= பார்க்கும் கொங்கைமேல். உத்தரிகம் சாத்து= மேலாடையால் மூடும்.

**பொழிப்புரை** : நுதற்கண்ணால் பார்க்கும் ஒப்பற்ற தலைவராகிய சிவபிரான்பார்க்கும் உமது கொங்கைகளை, மேலாடையால் மூடிமறைக்கும் உலகுடைய தாயே! மும்மலக்கட்டுடையவர் மலங்களை வெறுத்துஒதுக்கினால் வீடுபேறு பெறுவர் என்பார்கள். எனவே அடியவர் மும்மலக்கட்டினை இகழ்ந்து ஒதுக்கிப் பிறர்அடையாத வீடுபேறுஅடைவர். ************************************************************

51. **மல்கித் திரியில் வளர்தீப நெய்சுருக்கில்**
**அல்கித் திரியும்மனத்(து) அன்(பு)அறுவேன் என்பெறுவேன்**
**நல்கித் திரியாத ஞானம்வைத் தால்வினைக்(கு)**
**ஒல்கித் திரியேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : திரியில் மல்கி வளர்தீபம= திரிக்கண் பெருகிச்சுடர்விடும் விளக்கு. நெய்சுருக்கில்= விளக்கில் உள்ள நெய்குறையுமானால். அல்கித்திரியும்= ஒளிகுறைந்து மாறுபடும். மனத்து அன்பு அறுவேன்= என்மனத்தில் உன்மேல் வைத்த அன்பும் அற்றுப்போனவனாவேன். திரியாத ஞானம் நல்கிவைத்தால்= எதனாலும் மாறுபடாத ஞானத்தை எனக்கு அருளினால். ஒல்கித் திரியேன்= மனம் தளர்ந்து அன்பில் மாறுபடமாட்டேன்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! திரிக்கண் பெருகிச்சுடர்விடும் விளக்கு, விளக்கின் நெய்குறைந்தால் ஒளிகுறைந்து மாறுபடும். அதுபோல் மனத்து அன்பிலும் மாறுபடுவேன். எனவே எதனாலும் மாறுபடாத ஞானத்தை எனக்குரியதாக்கினால் மனம் தளர்ந்து திரியமாட்டேன், அருள்க.

**விளக்கம்** : விளக்கில் குறையாத நெய்வைத்தால் ஒளிகுறையாது; மனத்தில் திரியாத ஞானம் வைத்தால் அன்புகுறையேன் என்றார்

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

52. **சொல்காதோ கண்ணோ சுருங்காதோர் தம்மையன்றி**
**மல்காதோர் என்றதைஎவ் வா(று)உணர்ந்து தேறுவனோ**
**நல்காதோர் தம்மைமுற்றும் நம்பினேன் என்ப(து)எனக்(கு)**
**ஒல்காதோ சிந்தை உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : சொல்= புகழ். சுருங்காதோர்= கேட்கு பார்க்கும் ஆற்றலில் குறையாதவர். மல்காதோர்= வளமை - மனவளமை இல்லாதவர். நல்காதோர்= கொடுக்காதவர். ஒல்காதோ= தளராதோ

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! புகழப்பெறும் கண்பார்வை காது கேட்கும்தன்மை ஆகியவற்றில் குறைவில்லாதவரை அறியமுடியும். மனவளமை இல்லாதவரை எவ்வாறு கண்டு தெளிவேன்! யார்க்கும் யாதொன்றும் தராதவர்களை முழுதும் நம்பினேன். அதனால் என்மனம் தளராதோ!
மனவளம் உள்ளவரையே நம்ப அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : சுருங்காதோர், மல்காதோர் நல்காதோர் - வினையாலணையும்பெயர்கள்.

53. **ஆற்றுநீர் பெருகி அற்றுவிடும் அல்ல(து)அறச்**
**சேற்றுநீர் போல்குழம்பும் செல்வநிலை நில்லாதால்**
**ஏற்றுநீர் கொள்வீர்என்று ஈயார்உட்க ஈவாருக்(கு)**
**ஊற்றுநீர் அன்றோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அற= மிகக்குறைய. நில்லாதால்= நிலையானதன்று. உட்க= நாண. ஊற்றுநீர்= செல்வம், இறைக்க இறைக்க ஊறும் ஊற்றுநீர்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! ஒருவரது செல்வம் ஆற்றுநீர்போல் பெகும், பின்முழுதும் வற்றிவிடும். அல்லது சேறானநீர்போல் சிறிதுபடும். அது ஒருவழிப்படாது. எனவே இதனைப்பெற்றுக் கொள்ளுங்கள் என்று கொடுக்காதவர் நாணுமாறு வழங்குகிறவர்க்குச் செல்வம் ஊற்றுநீர் இறைக்க இறைக்கச் சுரப்பதுபோல் சுரந்துகொண்டே இருக்கும்.

**விளக்கம்** : செல்வம் நிலையில்லாதது :

" ஆற்றுப் பெருக்குஅற்று அடிசுடும் அந்நாளும்
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லைஎன மாட்டார் இசைந்து. ( நல்வழி. 9 )

“ ஆறிடும் மேடும் மடுவும்போ லாம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் “ ( நல்வழி. 32 )
“ நிறைசெல்வம்,நீரில்சுருட்டு நெடுந்திரைகள் “ ( நீதிநெறி விளக்கம்+ சிதம்பரச்490.)

\

54. **நன்றுசொல்லி நால்வருக்கு நன்மைசொல்லிப் புன்மைசொல்லிக்**
**கன்றுசொல்லி னான்அவரைக் காய்ந்துசொல்லி ஏற்ப(து)என்னால்**
**இன்றுசொல்லி நீக்கஒட்டா(து) இல்லாமை பொல்லாதது**
**ஒன்றுசொல்லில் ஆமே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை :** நால்வருக்கு= நான்குபேருக்கு. புன்மை= கொடுக்காததன் இழிவு. கன்று= வருத்தும் சொல். காய்ந்து= சினந்து. ஏற்பது= கேட்டுப்பெறுவது. என்னால்= என்னிடம். இன்றுசொல்லி= இல்லைஎன்று சொல்லி. நீக்கஒட்டாது= நீக்கமுடியாது - உள்ளதேயாகும். இல்லாமை= வறுமை. ஒன்றுசொல்லில்= நீ சொல்லொன்று சொன்னால். ஆம்= என்வறுமை தீரும், வளமையுண்டாகும்.

**பொழிப்புரை :** நான்குபேரிடம் - பலரிடம் என்வறுமையால், கொடுக்கும் நற்குணம்பற்றிக்கூறி, அதனால்வரும் நன்மையைச்சொல்லி, கொடுக்காமையின் கீழ்க்குணத்தைச் சொல்லி, அவர்கள் வருந்துமாறு சொல்லி, அவரைச் சினந்து சொல்லிப்பெறுவது, என்னிடம் நீக்கமுடியாத பொல்லாத குணமாகும். உலகுடைய தாயே! நீ ஒருசொல் சொன்னால் போதும், என்வறுமை தீரும், வளம்பெருகும். அருள்க.

**விளக்கம் :** ஈதல், ஈயாமை, கொடுத்தல், கொள்ளாமை பற்றி :

“ ஈஎன இரத்தல் இழிந்தன்று, அதன்எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று.
கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று, அதன்எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று. ( புறம். 204 )

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

55. **கத்துப்பி டித்தேன் கடைப்பிடிஎன்(று) உன்கருணக்கு**
**ஒத்துப்பி டித்தேனைக் கொண்டுபணி கொள்ளாயோ**
**பத்துப்பி டித்(து)ஆதி பாண்டரங்கன் தாண்டவத்துக்(கு)**
**ஒத்துப்பி டித்தாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை :** கத்துப்பிடித்தேன்= பிதற்றினேன். கடைப்பிடி= வாழ்க்கைமுறை ..ஒத்துப்பிடித்தேனை= ஒத்துவாழ்ந்தஎன்னை. பணிகொள்ளாயோ= தொண்டினை ஏற்கமாட்டாயா. பத்துப்பிடித்து= திருவடிகொண்டு. ஆதி= முற்காலத்தில். பாண்டரங்கன் தாண்டவத்துக்கு= சிவபிரானின் பாண்டரங்கக் கூத்துக்கு. ஒத்துப் பிடித்தாய்= ஒத்துநின்றவளே.

**பொழிப்புரை :** ஆதியில் தன்திருவடியால் பாண்டரங்கக் கூத்தாடிய சிவபிரானுடன் ஒத்துநின்றவளே! உலகுடைய தாயே! இதுதான் வாழ்க்கைமுறைஎன்று பல பிதற்றினேன். ஆயினும் உன்கருணையுடன் ஒத்துவாழ்ந்த என் தொண்டினை எற்கமாட்டாயா!

**விளக்கம் :** சிவபிரான் ஆடிய முக்கூத்துகள் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்பன.. பாண்டரங்கம் என்பது, பெருமான் முப்புரங்களையும் எரித்ததால் உண்டான வெண்மையான நீறில் ஆடியது. பாண்டு= வெண்மை. வெந்துவெண்மையான நீறால்ஆன அரங்கில் ஆடியதால் இப்பெயர் பெற்றது இம்முக்கூத்துகளையும் கலித்தொகை கடவுள்வாழ்த்துச் செய்யுள் குறிப்பிடுகிறது.

.

56. **மூடம்இது அன்றோ முறைதிறம்பின் வம்(பு)இலையோ**
**பாடம்இடும் கல்விப் பயன்ஒழுக்கம் பாழ்படலால்**
**தேடஅரும் பொருள்கள் சேர்த்தஎல்லாம் போக்கியவெற்(று)**
**ஓடம்என நிற்பேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மூடம்இது= அறிவற்ற செயல் இது. முறை= அறநெறி. வம்பு= துன்பம்.பாடம் இடும்= பக்குவப்படுத்தும். பாழ்படல்= வீணாதல். போக்கிய= கவிழ்த்த.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! அறநெறி தவறினால் பெருந்துன்பம் அல்லவா! அறந்தவறுதல். அறிவற்ற செயலல்லவா! அதனால் நம்மைப்பக்குவப்படுத்தும் கல்வியின் பயனாகிய் ஒழுக்கம்பாழாவதால், தேடுதற்கரியதாய்ச் சேர்த்த அரியபொருள்களைஎல்லாம் கவிழ்த்தவெறும் ஓடமாக நிற்பேன். எனவே அறநெறி தவறாது வாழ அருள்.

**இலக்கணக்குறிப்பு:** இச்செய்யுள் உவமையணி.

57. **மூடப்படு தழல்சூழ் மோகமனமாய் நமன்போர்**
**ஆடப்படுமுன் விரைந்(து)ஆட் படநின் பால்படுமோ**
**வாடப்படு சிறையாய் வல்விலங்கில் பட்டவருக்(கு)**
**ஓடப் படுமோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மூடப்படு தழல்= நீற்றினால் மூடப்பெற்ற நெருப்பு. மோகமனம்= ஆசையால் மூடப்பட்ட மனம். போராடப்படுமுன்= போர்தொடங்குமுன். விரைந்து. நின்பால் ஆட்படப்டு படுமோ என்க. ஆட்ப= அடிமைப் பட. வல்விலங்கில் பட்டவர்= வலிமையான மும்மலமாகிய விலங்கில் அகப்பட்டவர் . ஓடப்படுமோ= அவ்விலங்கை விட்டு வெளியேறமுடியுமா.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நீற்றினால் மூடப்பட்ட நெருப்புப்போல் ஆசையால் மூடப்பட்ட மனத்துடன் உள்ளநான், என்னுயிர்கவரவரும் யமனுடன் போர்செய்யுமுன் விரைவாக உன்னிடம் அடிமைப் படமுடியுமா ? முடியாது. துன்பப்படுத்தும் சிறையாகஉள்ள வலிமையான மும்மலவிலங்கில் அகப்பட்டவரால் அதிலிருந்து வெளியேற முடியுமா ? முடியாது. தாயே அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : நின்பால் படுமோ, ஓடப்படுமோ - எதிர்மறை ஓகாரங்கள்.

58. **கிட்டுமோ கிட்டா(து)உன் கேண்மைவணங் கேன்என(து)ஊழ்**
**தட்டுமோ தட்டா(து)உன் தண்ணளியைத் தாராய்நீ**
**எட்டுமோ எட்டாத என்மனம்நான் ஈடேற**
**ஒட்டுமோ ஒட்டா(து) உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கேண்மை= அருள். தட்டுமோ= தடைசெய்யுமோ. தண்ணளி= கருணை. எட்டாத என்மனம் நான்ஈடேற எட்டுமோ= உன்பால் பொருந்தாத என்மனம் நான்கடைத்தேற உன்பால் பொருந்துமோ. ஒட்டாது= பொருந்தச்செய்யாது.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! வணங்காத என்னை உனதுஅருள் நெருங்குமோ? நெருங்காது. உன்அருளை என்ஊழ்வினை தடைசெய்யுமோ?.ஊழ்வினைதடைசெய்யாது உன்அருளைநீ தந்தருள். நான் கடைத்தேற உன்பால் என்மனம் பொருந்துமோ? என்மனத்தை என்ஊழ் உன்பால் பொருந்தச்செய்யாது. பொருந்த அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : அடிதொறும் முதல்இருசீர்கள், சீர்முரண்தொடையில் உள.

59. **பண்ணாது நன்மைபுன்மைப் பாழ்வினைஎந் நாள்விடியும்**
**மண்ணா(து) இருந்தால் மணியும்மணி ஆகாதே**
**எண்ணாத எண்ணிமன(து) ஈ(டு)அழிய வைப்ப(து)உனக்(கு)**
**ஒண்ணா(து)என் கண்ணே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : புன்மைப் பாழ்வினை நன்மைபண்ணாது என்க. புன்மை= கீழான. மண்ணாது இருந்தால்= கழுவித்தூய்மை செய்யாதிருந்தால். மணி= மாணிக்கமணி. ஈடு= வலிமை. ஒண்ணாது= தக்கதாகாது.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! கீழான, பாழ்பட்டஎன்வினை நன்மைசெய்யாது. எனக்கு விடிவுகாலம் எந்நாள்? கழுவித்தூய்மை செய்யாதிருந்தால் மாணிக்கமணியும் மணியாக ஒளிராது. என்கண்ணாக விளங்குகிறவளே! எண்ணக்கூடாதனவற்றை எண்ணி மனவலிமை இழக்கவைப்பது உனக்குத் தக்கசெயலாகாது. விடிவுகாலம் அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்புஅணி.

60. **பண்ணாதோ பேரருள்உன் பார்வைஅத னால்எனக்(கு)**
**நண்ணாதோ இவ்இடரான் நான்இரங்க நீஇரங்க**
**ஒண்ணாதோ உன்மனம்தான் என்மனம்கல் என்றதுதான்**
**ஒண்ணாதோ அம்மே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : உன்பார்வை பேரருள் பண்ணாதோ. இவ்விடர் நண்ணாது= இத்துன்பம் அணுகாது. நான் இரங்க= நான்வருந்த. நீ உன்மனம்தான் இரங்க. நீ இரங்க= நீ இரக்கம்காட்ட. ஒண்ணாதோ= இயலாதா..

**பொழிப்புரை** : உலகுடைய தாயே உன்கடைக்கண் நோக்கு எனக்குமிக்க அருள்புரியாதா! அவ்வருளால் இந்தத்துன்பம் என்னை அணுகாது. நான்வருந்தக்கண்டு நீ உன்மனம் இரங்கஇயலாதா! என்மனம் கல்லென்றது பொருந்தாது தாயே ! அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : பண்ணாதோ - ஓகாரம் வினாக்குறித்தது. நண்ணாதோ - ஓகாரம் அசைநிலை. இடரான் - ஆன் - சாரியை. இரங்க ஒண்ணாதோ - வினாஓகாரம். என்றதுதான் ஒண்ணாதோ - ஓகாரம் அசைநிலை. . .

61. **நீதிஅவாய் உன்னை நினைப்போர் வினைத்தீயைக்கு**
**ஆதியசாம் பிராச்சியபதம் தம்கைவிலைக்கும் கொள்வாரால்**
**வாதிபலர் அங்(கு)அவருக்(கு) இங்(கு)இதனைப் பார்க்கவும்ஓர்**
**ஊதியம்வே(று) உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நீதி= மெய் - ஞானம். அவாய்= விரும்பி. வினையைத்தீய்க்கு= இருவினைகளையும் நீறாக்கு. ஆதிய= சிவபிரானுடைய. சாம்ராச்சியபதம்= சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதங்கள். கைவிலை= சிறு முயற்சி.. அங்கு அவருக்கு வாதிபலர். அப்பதங்களில் அவர்க்குப் (பணிசெய்யும்) முறையினர் பலராவர். ஊதியம்= பெறும்பேறு.

**பொழிப்புரை** : ஞானத்தை விரும்பி உன்னைநினைப்பவர் இருவினைகளையும் நீறாக்கிய சிவபிரானின் ஆளுகைக்குட்பட்ட சாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதவிகளை சிறு முயற்சியிலேயே பெறுவர். அவ்விடங்களில் அவருக்குப் பணிசெய்யும் முறையுடையவர் பலராவர்,. இதைவிட அடையத்தக்க பெரும்பேறு உண்டோ? இல்லை.

**விளக்கம்** : சாலோகம், சாரூபம், சாமீபம் சாயுச்சியம் என்பனமுறையே சிவலோகத்தில் இருத்தல், சிவபிரான் அருகிலிருந்து பணிசெய்தல், சிவபிரானின் திருஉருத்தாங்குதல், சிவபிரானுடன் கலத்தல் ஆகும்.
. " சாலோக சாரூப சாமீபமும் புசிப்பித்து " ( கந்தர்கலிவெண்பா. கண்ணி 20 )

சிவபிரானின் திருஉருத்தாங்கிய சாரூபர் கூட்டத்திலிருந்து , சிவபிரானை வேறாகப்பிரித்துக் காணமுடியாது என்பார் ஸ்ரீ குமரகுருபர அடிகள். காசிக்கலம்பகம் பா 48 இல். அது,

" கண்ணிருக்கும் திருநுதலும் கனலிருக்கும் திருக்கரமும் கலந்துஓர் பேதைப்
பெண்ணிருக்கும் இடப்பாலும் பிறைஇருக்கும் மவுலியுமாய்ப் பிரிக்கல் ஆகா
எண்ணிருக்கும் கணத்தோடும்ஆ னந்தவனத்து இருப்பாரை எங்கேகாண்பார்
பண்ணிருக்கும் மறைகளும் எண்கண்ணனும் கண்ணனும் அமரர் பலரும் தானே.

( எண்ணிருக்கும் கணம்= எண்ணற்ற சாரூபஉருவினர் கூட்டம். ஆனந்தவனம்= காசி. எண்கண்ணன்= பிரமன் கண்ணன்= திருமால்)

62. **வெள்ளமோ வெள்ளிமலை மேடோ தமிழ்மலைக்கீழ்ப்**
**பள்ளமோ தெள்ளியநாற் பத்துமுக்கோண மத்தியமோ**
**கள்ளமோ காண்கிலன்நான் காண்பேன் உனக்(கு)அடியார்**
**உள்ளமோ கோயில் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வெள்ளம்= கடல். வெள்ளிமலை மேடு= கயிலைஉச்சி. தமிழ்மலை= பொதிகைமலை. கீழ்ப் பள்ளம்= அடிவாரத்தில் உள்ள கோயில். மத்தியம்= நடு. கள்ளம்= மறைந்திருத்தல், காண்கிலன்= நான் காணவில்லை. உனக்கு அடியார் உள்ளமோ நான்காண்பேன்= உன்அடியவர் உள்ளத்தில் நான் உன்னைக் காண்பேன்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நீ இருப்பது கடலிலா, கயிலைமலை உச்சியா, பொதிகைமலை அடிவாரத்திருக்கோயிலா, தெளிவானநாற்பது முக்கோணங்களின் நடுவிலா, இல்லை எங்கும் மறைந்துள்ளாயா? உன்னைநான் காணமுடியவில்லை. ஆனால் உன்னடியார் உள்ளத்தில் கோயில் கொண்டிருப்பதைக் காண்பேன்.

**விளக்கம்** : " உள்ளம் பெருங்கோயில் " என்பது திருமந்திரம். பெருங்கோயிலாவது எக்காலத்தும் அழியாதகோயில். ஆன்மாவும் அதனுள்ளமும் பிரியாதன. ஆன்மாவுக்கு அழிவில்லையாதலின் உள்ளத்திற்கும் அழிவில்லை. ஆனால்.உலகக்கோயில்கள் காலப்போக்கில் அழிவன. இறைவனிருக்கும் உள்ளம் அழிவில்லாதது ஆதலின் உள்ளம் பெருங்கோயில் என்றார்.

சிவஞானபோதம், ஆன்மாவை - உயிரைக்குறிக்கும் பலஇடங்களில் உள்ளம் என்றே குறிக்கிறது. எனவே உள்ளம் என்பதற்கு ஆன்மா - உயிர் என்றுகொள்வதும் பொருந்தும்.

**இலக்கணக்குறிப்பு** : வெள்ளமோ, மேடோ, பள்ளமோ, மத்தியமோ, கள்ளமோ - ஓகாரங்கள் வினா ஓகாரங்கள். உள்ளமோ - ஓகாகாரம் அசைநிலை.

63. **மெள்ளத் திருப்பாய்என் விம்மலைஉன் பொம்மல்முகை**
**வள்ளத் திருப்பால் மறைக்குழந்தைக் கேசுரப்பாய்**
**கள்ளத்து இருப்பாம்என் கல்மனம்விட் டேஅடியார்**
**உள்ளத்(து) இருப்பாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : என்விம்மலை மெள்ளத்திருப்பாய் என்க. விம்மல்= தேம்பி அழுதல். பொம்மல் முகை வள்ளம்= பொலிவுஉடைய திருமார்பாகிய கிண்ணம். மறைக்குழந்தை= திருஞானசம்பந்தர். கல்மனம்= கருங்கல் ஒத்தமனம்.

**பொழிப்புரை** : உன்னருளுக்கு ஏங்கும் எனது தேம்பி அழுதலை மெள்ள மாற்றியருள். உன்பொலிவார்ந்த மொட்டாகவிளங்கும் திருமார்பிலிருந்து பொற்கிண்ணத்துப் பாலினைத் திருஞானசம்பந்தர்க்கே சுரப்பாய்!. கள்ளம்குடிகொண்ட கல்போன்ற என்மனத்தைவிட்டுவிட்டு அடியவரின் மனத்தில் குடிகொண்டவளே! உலகுடைய தாயே! எனக்கு அருளுக.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர்க்குத் திருமுலைப்பால் அளித்ததால் அம்மையை அவர்க்குத்தாய் என்றும்,முருகபிரானுக்குத் திருமுலைப்பால் ஊட்டாததால் முருகனுக்கு அவளைச் செவிலியென்றும் கூறுவார் ஸ்ரீ குமரகுருபரஅடிகள் :

" முலைப்பாலால், கழுமல மதலை வயிற்றைநி ரப்பிம யில்ச்சேயைக்
களிரொடும் வளர்த்த அருட்வி லித்தாயே! " ( மீ. பி தமிழ்..43 )

**இலக்கணக்குறிப்பு** : குழந்தைக்கே - ஏகாரம் தேற்றப்பொருளது.

64. **பொன்னைநம்பி வே(று)ஓர் புவியைநம்பி ஒவ்வொருவர்**
**தன்னைநம்பி ஆயிரம்பேர் தன்னைநம்பி வாழ்வாரால்**
**என்னைநம்பி னோர்சலிக்க நான்சலிக்க என்றுநன்றாய்**
**உன்னைநம்பி வாழ்ந்தேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : புவி= நிலம். சலிக்க= வெறுக்க.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! சிலர் பொன்னை நம்பியும்,சிலர் நிலத்தை நம்பியும், சிலர் தன்னையேநம்பியும், மற்றும்சிலர் ஆயிரம்மக்களைநம்பியும் வாழ்வர். என்னை நம்பியவர் என்னை வெறுக்கவும், நான் அவர்களை வெறுக்கவும் வாழ்க என்று நன்முறையில் நான் உன்னைநம்பி வாழ்ந்தேன். நம்பியவரைக் கைவிடலாகாது என்பதால் எனக்கு அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : நன்றாய் உன்னைநம்பி வாழ்ந்தேன் - புகழ்வதுபோலப் பழித்தல். இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலையணி.

65. **கற்றதுணை உண்டாம் கருத்தறிவு கல்வியன்றோ**
**பெற்றதுணை மற்றோர் பெருந்துணைகள் வேறாமோ**
**அற்றதுணை யாதோ அருந்துணையாய் நல்(கு)எனக்(கு)ஆர்**
**உற்றதுணை அம்மா உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : கல்வி கற்றதுணை கருத்து அறிவு உண்டாம்= கல்விகற்றஅளவு மனத்தில் விவேகம் தோன்றும். பெற்றதுணை மற்றோர் பெருந்துணைகள் வேறு ஆமோ= நான் பெற்றுள்ளதுணதவிர வேறு பெரியதுணை வேண்டுமோ. அற்றதுணை யாது= என்னை விட்டுவிலகிய துணைஎது, எனக்கு உற்ற துணையார்= எனக்கு வாய்த்த துணைவேறுயார். அருந்துணையாய் எனக்கு நல்கு= கிடைத்தற்கரிய துணையாக உன்அருளை எனக்கு அருளுக.

**பொழிப்புரை** : கல்விகற்ற அளவு மனத்தில் விவேகம் தோன்றும். நான்பெற்றுள்ள கல்வித்துணை தவிர வேறு பெரியதுணை வேண்டுமா! என்னைவிட்டு விலகியதுணை என்அறியாமையாகும். எனக்கு வாய்த்த துணையான உலகுடைய தாயே! உன்அருளை அரிய துணையாய் எனக்கு அருள்வாயாக.

**விளக்கம்** : கற்றதுண உண்டாம் கருத்தறிவு :

" நீரளவே ஆகுமாம் நீர்ஆம்பல் தன்கற்ற
நூலளவே ஆகுமாம் நுண்அறிவு " ( மூதுரை. 7 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பொருள் பின்வருநிலையணி.

66. **ஆட்டைக்(கு) ஒருதரம்தான் ஆனாலும் ஈனமலக்**
**கூட்டைக் கழுவிஅம்மை கோயில்மணி வாசலில்போய்**
**பாட்டைக் குழறினும் சொல்பற்றுகிலா(து) அற்ற(து)உளம்**
**ஓட்டைக் குடமோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : ஆட்டை= ஆண்டு. ஈனமலக்கூடு= கீழான மலங்களுடைய உடம்பு. கழுவி= நீராடி குழறினும்= குழறிச்சொன்னாலும். உள்ளம் சொல் பற்றுகிலாது அற்றது= மனம் சொல்லுக்குரிய பொருளாகிய உன்னைப் பற்றிக்கொள்ளாது ஓடியது.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! கீழான மலங்களுடைய உடம்பைக்கழுவி - நீராடி, தாயே உனது அழகியதிருக்கோயில் வாசல்முன்போய் ஆண்டுக்கு ஒருமுறைஎன்றாலும் உன்னைப்போற்றும் பாடலைக்

குழறிச் சொன்னாலும் என்மனம் சொல்லின் பொருளாகிய உன்னை இறுகப்பற்றிக்கொள்ளவில்லை . ஏன்! என்உள்ளம் ஓட்டைக்குடமோ?அவ்வாறு ஆகாது அருள்.

**விளக்கம்** : குழறிப்பாடினாலும் அம்மை ஏற்பாள் ;

" கோழைமிட றாககவி கோளும்இல வாகஇசை கூடுவகையால்
ஏழைஅடி யார்அவர்கள் யாவைசொன சொல்மகிழும் இடமாம்."( திருமு. 2. திருவைகாவூர் 1 )

67. **வேட்டம்இலாக் கானகத்து வெவ்விலங்கா வெவ்வினைஉன்**
**நாட்டம்இலாப் பாழ்மனது நண்ணினதுக்(கு) ஒண்ணாதோ**
**வாட்டம்இலாச் சீர்குலைந்து வாடிநிற்க நான்மறுகில்**
**ஓட்டம்இலாத் தேரோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வேட்டம்= வேட்டை. வெவ்விலங்கா= கொடிய விலங்காக. உன்நாட்டம் இலா= உன் குறிக்கோள் இல்லாத. ஒண்ணாது= பொருந்தாதது. மறுகில்= தெருவில். ஓட்டம்இலா= ஓடாத.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! யாரும்வேட்டையாடாத காட்டில் வாழும் கொடிய விலங்கு போல், என்கொடிய ஊழ்வினையால், உன்னைப்பற்றிய குறிக்கோள் இல்லாமல் என்பாழானமனம் வாழ்வது பொருந்தாதது. சிறிதும் வருத்தமின்றி என்சிறப்புகள் எல்லாம் கெட்டு நான்வாட்டமுடன் நிற்க, தெருவில் ஓடாது நிற்கும் அலங்காரத் தேரல்ல. தேரின் குறிக்கோள் தெருவில் ஓடுவதுபோல், என்னையும் நல்வழியில் இயக்கு.

**இலக்கணக்குறிப்பு** : ஒண்ணாதோ - ஓகாரம் அசைநிலை. தேரோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது. முதலாமடி உவமையணி. ஈற்றடி பிறிதுமொழிதல் அணி.

68. **சொற்பனமாம் வாழ்வுசுப சோபனமா ஞானம்ஒன்று**
**கற்பனயா வும்தெளிந்து காண்பனவும் காண்பார்நான்**
**அற்பன்அந்தோ சத்(து)உணரேன் ஞானநிலை கண்டவர்தம்**
**உற்பனம்ஆர் காண்பார் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : வாழ்வு சொற்பனம்= வாழ்க்கை மிகச்சிறிது. சோபனமா ஞானம்= நல்வாழ்த்தாக விளங்குவது ஞானம். தெளிந்து= தெளிவாகக் கற்று. சத்து= உண்மை - இறை. உற்பனம்= உண்மைநிலை - இறைநிலை.

**பொழிப்புரை** : வாழ்வு மிகச்சிறிது. அதில் நல்வாழ்த்தாக விளங்குவது ஒப்பற்ற ஞானம்என்பதைக் கற்கவேண்டியன எல்லாம்கற்று, அனுபவிக்க வேண்டியன எல்லாம் அனுபவிக்கும் சிலர்அறிவர். . நான் அற்பன். அந்தோ உண்மைப்பொருளை - இறைவனை உணரவில்லை. ஞானநிலைகண்டவரின் இறைநிலையை யாரால் காணவியலும். காட்டியருள்க.

**விளக்கம்** : வாழ்க்கை மிகச்சிறியது ;

" நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் உலகு " ( பொய்யாமொழி.336 )

69. **பூசனையால் உன்கமலப் பூஞ்சரணம் பூர்வசென்ம**
**வாசனையார் காண்பார்அது வஞ்சனையார் காண்பரோ**
**ஈசனையா னாலும்அவர் எண்ணார் அவர்கருத்தின்**
**யோசனையார் காண்பார் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பூஞ்சரணம்= மெல்லடி. வாசனை= அறிவு. யோசனை= நினைவு.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! முற்பிறப்பின் அறிவுடையவர், உன் மெல்லடியை வழிபாட்டால் காண்பார். வஞ்சனையான மனமுடையவர் காணார்; ஈசனைப்பற்றி என்றாலும் அவர்நினையார். அவர்மன நினைவை யாரால் அறியமுடியும்! யாராலும் முடியாது.

**இலக்கணக்குறிப்பு** : வாசனையார், யோசனையார் வினையாலணையும் பெயர்கள்.

70. **நையும்வகை செய்துமனம் நாணும்வகை செய்திஅறம்**
**செய்யும்வகை செய்துநன்றி சேரும்வகை சேராயோ**
**பொய்யும்வகை ஒன்றும்இலாப் புண்பாடும் போய்அடியேன்**
**உய்யும்வகை உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மனம் நையும்வகை செய்து நாணும்வகை செய்தி என்க.. செய்தி= வைக்கிறாய். நன்றி= நன்மை. பொய்யும்வகை= பொய்கூறும் வகை. புண்பாடு= மனம் புண்படுதல்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நையுமாறுசெய்து நான் வெட்கப்படவும் நீ.வைக்கிறாய்.. அறம்செய்யும்வகையில் செய்து, அதனால் நன்மையடையும் வழியில் என்னைச் சேர்க்கமாட்டாயா! பொய் சொல்லவகையில்லாமையால், மனம்புண்படும் என்நிலைபோய் நான்ஈடேறும் வகைஉள்ளதா? அதனை அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : செய்தி - முன்னிலை ஒருமைவினைமுற்று. புண்பாடு= பாடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

71. **கோலக்கங் காநதியும் கூன்பிறையும் நாறும்உன்தாள்**
**நீலக்கண் பார்த்(து)எனக்கு நீஉதவு நாள்எந்நாள்**
**மால்அக்கண் சாத்துமண வாளரொடு நீஇருந்த**
**ஓலக்கம் காண்பேன் உலகுடைய மாதாவே,**

**குறிப்புரை** : நாறும்= மணக்கும். நீலக்கண்= அருட் கண். மால் அக்கண் சாத்து= திருமால் தன்கண்ணைச் சாத்திய / விருப்புடன் தன்காணால்பார்க்கும். ஓலக்கம்= கொலுவிருக்கை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! அழகிய கங்கையாறும், மூன்றாம்பிறையும் மணக்கும் திருவடியுடையநீ, உனது அருட்கண்ணால்நோக்கி எனக்குஎந்நாளில் உதவுவாய்! அன்றுவிருப்புடன் தன்கண்களால் உன்னைநோக்கும் உன்கணவனாகிய சிவபிரானுடன் நீ இருக்கும் திருஓலக்கக்காட்சியை நான்காண்பேன்.

**விளக்கம்** : முதலடியில், சிவபிரான் அம்மையைச் "சீறேல்என்று சீரடிபணிந்ததன்" விளைவு கூறினார்.

72. **ஆலமிடு துன்பத்(து) அறிவின்நெருப் பாற்றின்மயிர்ப்**
**பாலம்இடு கின்ற(து)எனப் பண்பில்இடம் இவவினதால்**
**வாலமுடை வெண்பிறையார் மாலையிட நாலுமறை**
**ஓலமிட நின்றாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அறிவில் ஆலம் இடுதுன்பத்து= அன் அறிவில் நஞ்சிடுவதுபோன்ற துன்பத்தை. நெருப்பாற்றின் மயிர்ப்பாலமிடுகின்றது என= நெருப்பாற்றில் மயிரால் பாலம் இடுவபோல். பண்பில் இடம்= நற்குணமின்றிவந்த செல்வம். இவவினது= துன்பம் தருகிறது. வாலம்= இளமை. ஓலமிட= அடைக்கலம் வேண்ட.

**பொழிப்புரை** : இளைய மூன்றாம் பிறைச்சூடிய சிவபிரான் உனக்கு மாலையிட, நான்குமறைகளும் அடைக்கலம் வேண்டஇருந்த உலகுடய தாயே! என்அறிவில் நஞ்சுஇடுவதுபோன்ற பெருந்துன்பத்தை, நற்பண்பின்றி வந்த செல்வம் நெருப்பாற்றில் மயிரால்பாலமிடுவதுபோல் தருகிறது. அருள வேண்டுகிறேன்.

**இலக்கணக்குறிப்பு** : ஆலம் இடுதுன்பம் - எடுத்துக்காட்டு உவமையணி. , நெருப்பாற்றில் மயிர்ப்பாலம் இடுகின்றது என - உவமையணி. என - உவமஉருபு.

73. **பெண்மைஎன்றும் ஆண்மைஎன்றும் பேதம்என்றும் சாதிஎல்லாம்**
**தண்மைஎன்று நெஞ்சிலொரு தன்மைஎன்றும் காண்பாரால்**
**திண்மைஎன்று பல்பலவும் தேர்வார் தெளிந்தபடி**
**உண்மைஎன்று காண்பேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பேதம்= பிரிவு - வகை. தண்மை= இகழத்தக்கது. நெஞ்சில் ஒருதன்மை= மனத்தில் ஒத்தநிலை. காண்பார்= நினைப்பவர். திண்மைஎன்று தேர்வார்= அதுவே வலிமையானது என்று முடிவுசெய்தவர். தெளிந்தபடி= முடிவுசெய்தபடி என்று= எந்நாளில்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! பெண் ஆண் என்பன பிரிவுஎன்றும், இவைஇரண்டும் தம்முள் வேறுபட்டன என்றும்; சாதிகள்எல்லாம் இகழத்தக்கன, தம்முள் ஒத்ததன்மையினஎன்றும் பலவற்றை மனத்தில் நினைத்து, அதுவே முடிவானது என்று முடிவு செய்தவர்கள்கருத்துப்படி உண்மைநிலையை என்று காண்பேன்

**விளக்கம்** : ஆண்சாதி பெண்சாதி தவிர வேறுசாதியில்லை. அனைவரும் ஒத்தநிலையினர் என்றார்..

**இலக்கணக்குறிப்பு** : காண்பாரால் - ஆல் - அசைநிலை.

74. **ஆம்காரணந்தான்அ(து) ஆங்கார வெம்பிணிக்குள்**
**பாங்கார் இருந்து பரிகாரம் செய்வாரேல்**
**வேங்காரம் வைத்தபுண்போல் வெவ்வினைப்பட் டேற்(கு)இரங்காய்**
**ஓங்கார வாழ்வே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : ஆங்கார வெம்பிணிக்கு பாங்கார் இருந்து உள்பரிகாரம் செய்வாரேல் அதுதான் காரணம் ஆம். ஆங்கார வெம்பிணி= ஆணவமாகிய கொடிய நோய். பாங்கார் இருந்து= பக்குவமாக வாழ்ந்து உள்= மனத்தால். பரிகாரம்= மருத்துவம். அதுதான் காரணம் ஆகும்= அதுவே கருவியாகும். வேங்காரம்= எரியும் தன்மையுடைய மருந்து. வெவ்வினைபட்டேற்கு= கொடியவினைவயப்பட்ட எனக்கு. ஓங்கார வாழ்வே= ஓங்காரத்தின் உள்ளோளியாக வாழ்கிறவளே.

**பொழிப்புரை** : ஓங்காரத்தின் உள்ளொளியாக வாழ்கிறவளே! உலகுடைய தாயே! ஆணவமாகிய கொடியநோயுடன்வாழ்ந்து, அதன் ஆற்றல்கெட, பக்குவமாக வாழும் மனமாகிய மருந்தைப் பயன்படுத்தின் அதுவே ஆங்காரத்தைவெல்லும் கருவியாகும். எரியும் தன்மையுடைய காரமருந்தைப் புண்ணில் வைத்ததுபோல் கொடிய ஆணவவினைவயப்பட்ட என்பால் இரங்கி அருள்புரிவாயாக.

**விளக்கம்** : ஆங்காரமாகிய ஆணவம், உயிரை - மனத்தைப்பற்றியுள்ள நோய். ஆதலின் மனப்பக்குவமே உரிய மருந்து என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : ஆங்கார வெம்பிணி - உருவகம். வேங்காரம் வைத்த புண்போல் வெவ்வினைப்பட்டேற்கு - உவமையணி.

75. **நீர்குறைய வாடி நிலைகுலைந்த தாமரைபோல்**
**சீர்குறைய வாடிநொந்து சிந்தைகுறை ஆகாதே**
**யார்குறைசொல் வோர்உனைநீ அங்(கு)உறைய ஈங்(கு)எளியேற்(கு)**
**ஓர்குறையும் உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நிலைகுலைந்த= தன் நிலையில் குலைந்த.. குறையாகாது= தளரக்கூடாது. நீ அங்கு உறைய= நீ என்மனத்தில் வாழ. ஓர்குறையும் உண்டோ= எக்குறையுமில்லை. உனைக்குறை சொல்வோர் யார் என்க

**பொழிப்புரை** : குளத்துநீர் குறைவதால் தன்நிலையில் குலைந்த தாமரை மலர்போல், என்சிறப்புகள் குறைய மனம்வாடி நொந்து தன்நிலையில் குறையக்கூடாது. உலகுடைய தாயே! நீ என்மனத்தில் வாழ்ந்தால் அற்பனாகிய எனக்கு எக்குறையும் இல்லை. நீ அற்பனாகிய என்மனத்தில் வாழ்வதற்கு உன்னையாரும் குறைசொல்லார். என்மனத்தில் குடிகொண்டருள்க

**இலக்கணக்குறிப்பு** : உண்டோ - எதிர்மறை ஓகாரம். இச்செய்யுள் உவமையணி.

76, **தப்பனைஎன் பார்ப்பர்உன்னைத் தாழ்ந்தவரைச் சூழ்ந்தவர்க்குக்**
**கைப்பனைவே ழம்தொழுவார் காம்(பு)அனைய தோள்அனையார்**
**துப்(பு)அனைய ஞானச் சொரூபனைமால் செய்யநிதம்**
**ஒப்பனைசெய் கூந்தல் உலகுடைய மாதாவே.**

**கூட்டுமுறை** : தப்பனை என்பு ஆர்ப்பர் உன்னைத் தாழ்ந்து அவரைச் சூழ்ந்தவற்குக் காம்பு அனையதோள் அனையார் கைப்பனை வேழம் தொழுவார் என்க.

**குறிப்புரை** : தப்பனை என்பு அணிவார்= இறந்துபோன திருமால் பிரமன் எலும்புகளை அணிந்த சிவபிரான். உன்னைத்தாழ்ந்தவரை= உன்னைப் பணிந்தவர்களை. சூழ்ந்தவர்= சிவபிரானையும் உன்னையும் சுற்றி இருந்தவர்கள். பனை வேழம் கைதொழுவார்= கைகூப்பி மிக்க இசையுடன் பாடுவார். துப்பு= பவளம். சொரூபன்= வடிவுடையவன் - சிவபிரான். மால்செய்=பெருமைப்படுத்த. நித்தம் ஒப்பனைசெய்= நாடோறும் அலங்கரித்துக்கொள்ளும். காம்பு அனைய தோள் அனைய தோள் அனையார்= மூங்கில்போன்ற வழுவழுப்பான தோள்களுடைய மகளிர். கைப்பனை வேழம் தொழுவார்= கைகூப்பி மிக்க இசைப்பா பாடித் தொழுவார்

**பொழிப்புரை** : பவளநிறத்தனும், ஞானவடிவனும்ஆகிய சிவபிரானைப் பெருமைப்படுத்தநாடோறும் ஒப்பனைசெய்துகொள்ளும் கூந்தலுடையவளாகிய உலகுடைய தாயே! இறந்துபோன திருமால் பிரமன்ஆகியோருடைய எலும்புகளை அணிந்த சிவபிரானையும், உன்னைப்பணிந்தவர்களையும், உன்னையும் சிவபிரானையும் சூழஇருந்தவர்களையும்; பசியமூங்கில்போன்ற வழுவழுப்பான தோள்களுடைய மகளிர், கைகூப்பி மிக்க இசையுடன்பாடித் தொழுவார்கள்.

**விளக்கம்** : நாடோறும் கூந்தல் ஒப்பனை செய்துகொள்ளுதல், தன்கணவன் ஈறிலிஎன்றபெருமையை உணர்த்துத்துதற்பொருட்டு. இந்திரன்,பிரமன், திருமால்முதலியோர் இறப்புக்குரியவரே;

" நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கைமணல் எண்ணின் இந்திரர்
ஈ(று)இ லாதவன் ஈசன் ஒருவனே" ( அப்பர். ஆதிபுராணத் திருக்குறுந்தொ. 3.)

காலம்முடிந்த பிரமன், திருமால் எலும்புக்கூட்டினை அணிந்தவன் சிவபிரான்:

" நங்காய்இ தென்னதவம் நரம்போடு எலும்பணிந்து
கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்துஇருவர்
தம்காலம் செல்லத் தரித்தனர்காண் சாழலோ." ( திருவாசகம். 235 )

( கங்காளம்= எலும்புக்கூடு. காலாந்தரம்= வாழ்வு முடிவு. இருவர்= பிரமன் திருமால் )

77. **செப்போசெப் பன்றொநான் செப்புவ(து) இப்புவனம்**
**வைப்போவைப் பன்றோநீ வாழ்வ(து)என்றும் வாழ்வதெல்லாம்**
**தப்போதப் பன்றோதனி உனைநான் நொந்த(து)உனக்கு**
**ஒப்போஒப் பன்றோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : செப்பு= சொல்லத்தக்க சொல்லா. செப்பன்றோ= சொல்லத்தகாத சொல்லா. இப்புவனம் நீ என்றும்வாழ்வது வைப்போ வைப்பன்றோ= இவ்வுலகில் நீ நிலைத்திருப்பது எமக்குச செல்வமா செல்வமன்றோ. வாழ்வதெல்லாம்= நான்வாழும் வாழ்க்கைமுழுதும். தனி= ஒப்பற்ற. ஒப்போ ஒப்பன்றோ= சம்மதமா சம்மதமில்லாததா.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான்சொன்னது சொல்லத்தக்கதா சொல்லத்தகாததா? இவ்வுலகில் நீ வாழ்வது எமக்குச் செல்வமா செல்வமன்றா? என்வாழ்க்கை தப்பானதா தப்பன்றா? உன்னை நான் நொந்துகொண்டது உனக்குச் சம்மதமா சம்மதமில்லாததா? கூறியருள்க.

**இலக்கணக்குறிப்பு** ; ஓகாரங்கள் வினாப்பொருளன

78. **செப்(பு)அலஉன் கொங்கைபசுந் தேன்அலஉன் பால்மொழிசெந்**
**துப்(பு)அலஉன் செவ்வாய் சுரும்(பு)அலஉன் பார்வைஅம்மே**
**இப்பலஒப்(பு) இந்திரைமற்(று) எல்லார்க்கும் உன்உறுப்புக்(கு)**
**ஒப்(பு)அலஎன் சொல்வேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : செப்பு= கலசம். பால்மொழி= தூயசொற்கள். துப்பு= பவளம். வாய்= இதழ்கள். சுரும்பு= கருவண்டு. பார்வை= கண்பாவை. இந்திரை= திருமகள்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உன்திருமார்பு கலசமா? கலசமல்லவா? உன்தூயசொற்கள் தேனா? தேன்அல்லவா?, உன்செவ்விதழ்கள் பவளமா? பவளமல்லவா? உன்கருவிழி வண்டா? கருவண்டல்லவா?. தாயே இப்பல ஒப்புமைகள் அனைத்தும் திருமகள் முதலியோர் அனைவர்க்குமாகும். உன் உறுப்புகட்கு இவை ஒப்பாகா.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் விலக்கணி.

79. **எய்த்தஎலாம் கையேற்று இரந்தஎலாம் இத்தனைசூழ்**
**வித்தஎலாம் மண்பிறப்பில் வீழ்த்தஎலாம் தாழ்ந்திடநீ**
**வைத்தஎலாம் எண்ணிஉன்னை வாழ்த்தினஎலாம் மனதுக்(கு)**
**ஒத்தஎலாம் சொன்னேன் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : எய்த்தஎலாம்= வறுமையுற்ற காலத்தில் எல்லாம். கையேற்று இரந்த= கைநீட்டி யாசித்து. சூழ்வித்த= ஆலோசிக்கவைத்த. மண்பிறப்பில் வீழ்த்த எலாம்= மண்ணுலகில் பிறந்தபோது விரும்பிய எல்லாம். தாழ்ந்திட= கீழாகுமாறு. வைத்த= எமக்காக இவ்வுலகில் அமைத்த. ஒத்த= பிடித்த -

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! நான் வறுமையுற்றபோதெல்லாம்.கைநீட்டி யாசித்தன இத்தனை, ஆலோசிக்கவைத்தன இத்தனை, இவ்வுலகில் பிறந்தபோதெல்லாம் விரும்பியன இத்தனை என்று எண்ணின், இவை அனைத்தும் கீழாகுமாறு; நீ எமக்காக இவ்வுலகில் வைத்தவற்றைஎல்லாம் எண்ணி உன்னை என்மனத்துக்கு ஒத்தவாறு உன்னைப்போற்றினேன்.

**விளக்கம்** : “ எத்தனை கோடிசெல்வம் வைத்தாய் இறைவா “ என்பது ஆன்றோர்ப் வாக்கு.

80. **மெல்ஆ சனாம்புயத்து வேதியன்அப் போ(து)இயற்ற**
**நில்லாச் சொரூபம்அதின் நேசம்வைத்து நிற்பேனோ**
**நல்லா சிரியர்என ஞானம்மொழிந் தார்மயங்கும்**
**உல்லாச மின்னே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மெல் ஆசன அம்புயம்= மென்மையான இருக்கையாகிய தாமரைமலர். வேதியன்= பிரமன். இயற்ற நில்லாச்சொரூபம்= படைத்தற்கரிய ஞானமாகிய உண்மைவடிவம். நல்லாசிரியர்= மிகச் சிறந்த குருமார். மயங்கும்= பரவசமடையும். உல்லாச மின்னே= மனக்களிப்பே வடிவானமின்னலே.

**பொழிப்புரை** : ஞானம்அருளிய மிகச்சிறந்தகுருமார் என்று போற்றப்பெறுவோர் பரவசமடைதற்குக் காரணமான மனக்களிப்பே வடிவான மின்னலே! உலகுடைய தாயே! மென்மையான இருக்கையாகிய தாமரைமலரில் இருக்கும் பிரமனாலும் படைத்தற்கரிய உனது ஞானவடிவாகிய உண்மைவடிவத்தில் அன்பு வைத்து வாழ்வேன்.

. **விளக்கம்** : சொரூபநிலை என்பது உண்மைவடிவத்தினைக் குறிக்கும். அம்மையின் சொரூபநிலை ஞானவடிவமாகும். இதனை,

" சத்திதன் வடிவுஏ தென்னில் தடையிலா ஞானம்ஆகும் " ( சித்தியார்,. 82 )

என்று குறிக்கும்.

81. **காதிமனோ வாக்(கு)உடல் செய்கற்பனையோ நற்பகல்முன்**
**மோதிஇம மாய்ஞானம் முடிக்கின்முடிவு ஆகாதோ**
**சோதிமகா மேருவில்லார் துங்கமனப் பங்கயத்தில்**
**ஓதிமமாய் நின்றாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : காதிசெய்= கன்மம்தரவந்த. மனோ வாக்கு உடல் கற்பனையோ= மனம் சொல் உடம்பின் செயல்கள் கற்பனயா. இமமமாய் ஞானநற்பகல் மோதி= இமயமலையாகிய ஞானப்பேரொளியால் மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றன் செயல்களையும் தாக்கினால். முடிவு ஆகாதோ= மூவினைகளும் பயன்தரா அல்லவா? மகாமேருவில் சோதியார்= மாமேருமலையை வில்லாக ஏந்திய ஒளிவடிவான சிவபிரான். துங்க= தூய. ஓதிமம்= அன்னப்பறவை.

**பொழிப்புரை** : மாமேருமலையை வில்லாகஏந்திய சிவபிரானின் தூயமனமாகிய தாமரையில் வாழும் அன்னப்பறவையாக உள்ளவளே! உலகுடைய தாயே! கன்மம் தரவந்த ஆன்மாவின் மனம் சொல் செயல்கள் மூன்றும் கற்பனையா? இம்மூன்றையும் இமயமலையாக விளங்கும் ஞானப்பேரொளியால் தாக்கினால் அம்மூன்றும் பயன்தராவல்லவா!

**விளக்கம்** : மனம் வாக்கு காயம் ஆகியவற்றின் செயல்களைப்பயன்கருதாதும்,நான்செய்கிறேன் என்ற எண்ணமுமின்றிச் செய்வதால் மூன்றின் பயனால் நாம் பாதிப்படைவதிலை. இவ்வகைப்பட்ட எண்ணமே ஞானநிலை. பாத்திரத்தில் உள்ள பாயசத்தைப் பரிமாறும் போது பாயசத்தின் சுவையறியாத கரண்டியின் நிலைபோன்றது இந்தஞானநிலை. இதனைப் பாரதியார்;

" பத்திசெய்து பிழைக்கச்சொன்னாள்பயன் எண்ணாமல் உழைக்கச்சொன்னாள் " என்பார்

**இலக்கணக்குறிப்பு** : மனோ வாக்கு உடல் - உம்மைத்தொகைகள். இமமாய் ஞானம்- உருவகம். மனப்பங்கயத்தில் ஓதிமமாய் நின்றவளே - முற்றுருவகம்.

82. **நற்சாபத் தண்அருளை நான்சார நல்கில்உனை**
**மற்சாதிப் பார்எவரோ வந்திலைஉன் சிந்தைஎன்னோ**
**கற்சாபத் தார்கருணைக் கண்களிக்க நண்(பு)அளிக்கும்**
**உற்சாகப் பெண்ணே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நற்சாபத் தண்ணருள்= நல்ல கயிலைமலை மேலிருப்பவரின் தண்ணிய அருள். மல்சாதிப்பார்= போரிடுவார். வந்திலை= அருள வரவில்லை. கற்சாபத்தார்= மேருமலையை வில்லாக ஏந்தியவர். நண்பு= நட்புரிமை.

**பொழிப்புரை** : மேருமலையை வில்லாக ஏந்திய சிவபிரான் கண்டு களிப்புற நட்புரிமை வழங்குவதில் மகிழ்கிறவளே! உலகுடைய தாயே! நல்ல மலைமேல் இருக்கும் சிவபிரானின் திருவருளை நான்பெற நீ வழங்கினால் உன்னுடன் போரிடுவார் யாருமில்லை. எனினும் நீ எனக்கு அருள வரவில்லை. உன்நினைப்பு என்ன! அருளவருக.

**இலக்கணக்குறிப்பு** : எவரோ, என்னோ - ஓகாரங்கள் அசைநிலைகள்.

83. **நித்தியோப வாசபலம் நின்னைவழி பாடுசெயும்**
**துத்திய உபசார சுகிர்தபலம் ஒவ்வாதால்**
**சத்திய உபசார சுபதன்ம பரிபாலனம்செய்**
**உத்தியோக வாழ்வே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நித்திய உபவாசபலம்= நாளும் மேற்கொள்ளும் நோன்பின்பலன் பலன். துத்திய உபசார சுகிர்த பலம்= புகழும் உபசாரத்தால் வரும்இன்பத்தின் பலன். ஒவ்வாது= ஈடாகாது. சத்திய உபசார சுபதன்மபரிபாலனம் செய்= உண்மையாக மேற்கொள்ளும் தூய அறத்தினால் அருளும். உத்தியோக வாழ்வே= ஆள்வினையுடையவளே.

**பொழிப்புரை** : உண்மையாக மேற்கொள்ளும் தூயஅறத்தினால் அருளும் ஆள்வினையுடையவளே! உலகுடைய தாயே! நாடோறும் மேற்கொள்ளும் நோன்பின்பலன், உன்னை வழிபடும்போது புகழும் உபசாரத்தினால் வரும் இன்பத்திற்கு ஒப்பாகாது.

**விளக்கம்** : அம்மையின் அருளும் ஆள்வினையாவது; இருவினை மலபரிபாகம் உற்ற ஆன்மாக்களுக்குச் சிவபிரான் வழங்கும் வீடுபேற்றின்பத்தை அனுபவிக்கும் பேற்றினை வழங்குதலும், இருவினைமலபரிபாகம் பெறவேண்டிய் ஆன்மாக்களுக்குப் பிறப்பினை அருளி மலபரிபாகமுறச் செய்தலும் ஆகும். அன்னையே அருட்சத்தியாய் - **அருளாற்றலாய்** இருந்து முன்னைச்செயலையும், தானே திரோதானசத்தியாய் - **மறைப்பாற்றலாய்** இருந்து பின்னைச்செயலையும் உரியவாறு செய்யும்திறத்தை, “ சுபதன்ம பரிபாலனம் செய் உத்தியோகம் “ என்றார்..

84. **முற்பாதகம் இதுவோ மூதுணரேன் ஏதுதய(வு)**
**எற்பாதவக் கிரணம் வீசஇருள் சூழாதே**
**பொற்பாத சேவைஇடர் போக்காத(து) ஊழ்புரிந்த**
**உற்பாதம் அன்றோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : முற்பாதகம்= முன்வினை. மூதுணரேன்= நன்குஉணரேன். தயவு ஏது=அருள்காரணமாக. எல்பாதவம் வீச= சூரியனின்ஒளிக்கிரணம்பட. இருள் சூழாது= இருளாகிய துன்பம்சூழாது. இடர்போக்காதது= என்துன்பத்தைப் போக்காதகாரணம். ஊழ்புரிந்த உற்பாதம்= என்ஊழ்வினை செய்தகொடுமை.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! முன்வினைதான் இத்துன்பத்துக்குக் காரணமோ? நன்கு உணரேன். உன்அருள்ஆகிய சூரியனின் ஒளிக்கிரணம்பட, துன்பஇருள் என்னைச்சூழாது. எனது, உன்அழகியதிருவடித் தொண்டு, என்துன்பம் போக்காததற்குக்காரணம் என்ஊழ்வினையின் கொடுமையாகும்.

**இலக்கணக்குறிப்பு** : இதுவோ - ஓகாரம் வினாப்பொருளது. எற்பாதவக் ......சூழாது= ஏகதேசஉருவகம்.

85. **நற்பலம்ஒன்(று) எய்திலதே நான்பலவாய் எண்ணும்இடர்**
**பற்பல புண்பாடு பற்பலஎன் சொல்வேனோ**
**பொற்(பு)அலர்செந் தாமரையில் பூத்த(து)என வாய்த்(து)ஒளிரும்**
**உற்பலம்என் கண்ணே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நற்பலம்= நன்மை. எய்திலதே= கிடைக்கவில்லையே. இடர்பற்பல= துன்பங்கள் பலப்பல. புண்பாடு= மனம் புண்படுதல். பொற்பு அலர்= பொலிவுமலர்ந்த. பூத்தது= தோன்றியது. உற்பலம்= திருமகள்.

**பொழிப்புரை** : பொலிவுமலர்ந்த செந்தாமரையில் தோன்றியதுபோல் எனக்குக் கிடைத்து ஒளிரும் திருமகளே! என்கண்ணே! உலகுடைய தாயே! நன்மை ஒன்றும்கிடைக்கவில்லையே! நான் பலவகையில் நினைக்கும் துன்பங்கள் பல; அவற்றால் மனம்புண்பட்டதும் பல.என்னவென்று சொல்வேன். அருள்க.

86. **இங்(கு)அரிப்புக் காரனைப்போல் ஏன்அரிப்பது என்பர்அந்தத்**
**தொங்கர்இக் கட்டேதொழிப்பார் சொற்கவியும் சொல்வேனோ**
**சங்கரிக்கத் தானைபடைதான் வேண்டுமோ கவிநீ**
**உச்சரிக்கப் போமே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அரிப்புக்காரன்= மண்ணிலிருந்து பொன்துகளை அரித்தெடுப்பவன். அரிப்பது= துன்புறுத்துவது. அந்தத்தொங்கர்= அக்கள்வர். இக்கட்டே தொழிப்பர்= வேண்டாத துன்பத்தையே அரித்தெடுப்பர். சொல் கவியும் சொல்வேனோ= குறைசொல்வார் சொல்லை நான்சொல்லமாட்டேன்.. சங்கரிக்க= என்துன்பங்களை அழிக்க. தானை படை= சேனையும் படைக்கருவியும். கவிநீ= ஞானிநீ.. உச்சரிக்க= சொன்ன அளவில்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! அரிப்புக்காரனைப்போல் இங்குத் துன்புறுத்துவது ஏன்? அக்கள்வர் வேண்டாத துன்பத்தையே அரித்துஎடுப்பர் என்று குறைசொல்வார் சொல்லைநான் சொல்லமாட்டேன். என்துன்பங்களை அழிக்க உனக்குச்சேனையும் படை, கருவிகளுமா வேண்டும்? அனைத்தையும் இயக்கும் ஞானி நீ. எனவே என்துன்பங்களை அழிக்க உன்ஒருசொல் போதுமே. அருள்புரியம்மா!

**விளக்கம்** : ஆற்றுமணலில் பொன்னெடுக்க முயல்வார் மீண்டும் மீண்டும் மணலைஎடுத்துச்சலிப்பர். அதுபோல் மீண்டும் மீண்டும் என்னைத்துன்புறுத்துவது ஏன் என்றார். அயன், அரி, அரனாகிய உருத்திரன், மகேசன், சதாசிவன் முதலிய அனைவரையும் படைத்தல் முதலிய ஐந்தொழில்களிலும் இயக்கும் ஞானத் தலைமையள். எனவே என்துன்பங்களை அழிக்க உன்னொருசொல்போதும் என்றார்.

87. **சூழியத்துக்(கு) ஆனசுருள் குழற்கும் தோள்இணைக்கும்**
**வீழியத்துப்(பு) ஆரிதழ்க்கும் வெண்ணகைக்கும் வெவ்வேறா**
**வாழிஅத்த தாமரைக்கும் வாழ்த்(து)உரைத்து வாடினநான்**
**ஊழியத்துக்(கு) ஆளோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : சூழியம்= உச்சிக்கொண்டை. வீழிய= விரும்பத்தக்க. துப்பு= பவளம். நகை= பல். அத்த தாமரை= கைத்தாமரை. ஊழியத்துக்கு= அடிமைப்பணிக்கு.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உனது உச்சிக்கொண்டைக்குரிய சுருள்கூந்தல், இருதோள்கள், விரும்பத்தக்க பவளஇதழ்கள், வெண்பற்கள், கைத்தாமரை ஆகியவற்றுக்கு வெவ்வேறா வாழ்த்துச் சொல்லியும் துன்புறும்நான் உன்அடிமைப்பணிக்கான ஆளா? வாழ்க. அருள்புரிக.

**விளக்கம்** : உன்னைப் போற்றுவதே தொழிலாகக்கொண்ட அடிமையாநான் என்றதன்மூலம் அருள்க என்றார்

**இலக்கணக்குறிப்பு** : வாழி - இடைச்சொல்.

88. **புந்திச் செயல்மயலில் பூண்டுபுல்லில் ஏதம்விடு**
**சிந்திச் சிதறினதாய்த்(து) ஈர்த்த(து)இடர் தீர்வேனோ**
**வந்திச் சுபாகிசிந்தை யானைவளர்ப் போர்கண்நையாய்**
**உந்திச் சுழியாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மயலில் புந்திச் செயல்பூண்டு= காமத்தில் அறிவு செயற்பட்டு. புல்லிலே= பெண்களைத் தழுவினால்.. ஏதம் விடுபுந்தி சிந்தி சிதறினதாய்த்து ஈர்த்தது இடர்= துன்பத்தில் என்னைச்செலுத்திய என்மனம் ,சிந்திச் சிதறிய தன்மையதாய் என்னை அறுத்ததுன்பம்.. இச்சுபாகி சிந்தையானை வந்து வளப்போர்கண் நையாய்= போகபோக்கிய மனமுடைய என்னை நீ வந்து பெரும்போர் புரியும் உன்காண்ணால் மருட்டி வருத்தாதே. உந்திச் சுழி= கொப்பூழிலிருந்து செல்லும் உரோமரேகையுடையவளே!.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! கொப்பூழிலிருந்து செல்லும் உரோமரேகை உடையவளே! நான் காமத்தில் அறிவு செயற்பட்டுப் பெண்களைத் தழுவினால், துன்பத்தில் என்னைச்செலுத்திய என்மனம்,

பலவாறு சிந்திச்சிதறிஎன்னை ஈர்த்தது. அவ்விடர் தீர்வேனோ! போகபோக்கிய மனமுடையஎன்னை. நீவந்து போர்புரியும் உன்கண்களால் மருட்டி வருத்தாதே திருத்தியருள்..

**விளக்கம்** : உந்திச்சுழியில் இருந்துமேலேறும் உரோமரேகை :

" உந்திச் சுழியின் மேலெழுந்த
உரோமப் பசுந்தாள் ஒன்று இரண்டின்
அந்திக் கமலம் கொடுவருவீர்
அம்பொற் கபாடம் திறமினோ " கலிங்கத்துப்பரணி. கடைதிறப்பு )

89. **நீஞ்சக் கடப்படுமோ நின்கரணத் தோணிதனில்**
**வாஞ்சைக் கடல்கடந்(து)என் வன்நெஞ்சம் வாராதே**
**தீஞ்சர்க் கரைமொழியாய் செய்யசரக் கூர்விழியாய்**
**ஊஞ்சற் குழையாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நின்கருணைத்தோணிதனில் நீஞ்சக்கடப்படுமோஎன்க. கரணம்= நற்செய்கை - அருள் நீஞ்சக் கடப்படுமோ= கடக்க இயலுமா. வாஞ்சைக்கடல்= ஆசைக்கடல். வாராதே= உன்னிடம் வராது. செய்ய சரம்= கூர்மையான அம்பு.

**பொழிப்புரை** : இனிய சர்க்கரை ஒத்துப்பேசுகிறவளே! கூர்மையான அம்புஒத்த விழிஉடையவளே! இங்குமங்கும் ஆடும் ஊஞ்சல்போல் ஆடும் குழையணிந்தவளே! உலகுடைய தாயே! உனது அருளாகிய தோணியில்ஏறிப் பிறவிக்கடலை நான்கடக்க இயலுமா? ஆசையாகிய கடலைக்கடந்து என்கொடியநெஞ்சு மீண்டு உன்னிடம் வாராது. உன்னிடம்வர. நீயே அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கரணத்தோணி, வாஞ்சைக்கடல் - உருவகங்கள். சர்க்கரைமொழி, சரக்கூர்விழி, ஊஞ்சல்குழை - உவமத்தொகைகள்.

90. **அம்(பு)அளவோ காவி அரும்(பு)அளவொ பார்வைஅருள்**
**சம்பளம்ஏற்(று) உண்பவர்க்குத் தானம்முத்தித் தானம்அன்றோ**
**பம்(பு)அளகை ஊரும் விண்ணோர் பட்டிணமும் கட்டிஅதற்(கு)**
**உம்பளமோ விட்டாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : அளவு= உவமையளவு. காவி= நீலோற்பலமலர். அருள் சம்பளம்= அருளாகிய ஊதியம். உண்பவர்= அடியவர். தானம்= இடம். பம்பு= வளம்செறிந்த. அளகை= குபேரனது நகர். விண்ணோர் பட்டினம்= தேவருலத்தவரின் அமராவதி நகர். கட்டி= உண்டாக்கி. உம்பளம்= மாநியம்.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உன்கண்கள் அம்பு ஒத்தனவோ! நீலோற்பலமலரின் அரும்பை ஒத்தனவோ? உன்திருக்கண் நோக்கினை ஊதியமாகப்பெற்று வாழ்கிறவர் வாழுமிடம் வீடுபேறாகிய இடமல்லவா! அவர்களுக்கு மாநியமாக நீ கட்டிவிட்டது வளம்செறிந்த குபேரனது அளகை நகரா! தேவர்கள் வாழும் அமராவதி நகரா! உன்அருளின் தன்மைஎன்னே!

**இலக்கணக்குறிப்பு** : அளவோ, அளவோ - ஓகாரங்கள் வினாப்பொருளன. ஊரும், பட்டிணமும் - எண்ணும்மைகள்.

91. **தேர்ச்சிதரா நெஞ்(சு)அறிவைத் தீங்கதிர்ச்செஞ் சாலிஎனப்**
**பேர்ச்சிதரா(து) இன்னம் பெருஞ்சிதலா உண்ணாதோ**
**வார்ச்சிதரா ஊழே வலிதேநான் சொன்னதுகேட்(டு)**
**ஊர்ச்சிதம்நீ செய்யாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை :** தேர்ச்சி= தெளிவு. தீங்கதிர்ச்செஞ்சாலி என= இனிய கதிருடைய செந்நெற்பயிர் போல். பேர்ச்சிதராது= வளர்க்காது. பெருஞ்சிதல்= பெரியகறையான். வார்ச்சி= உயர்வு. ஊர்ச்சிதம்= உறுதி. செய்யாய்= செய்க.

**பொழிப்புரை :** உலகுடைய தாயே! தெளிவைத்தராத என்உள்ளம் எனது அறிவை இனியகதிர் கொண்ட செந்நெற்பயிர்போல் வளர்க்காமல் இன்னமும் பெரிய கறையானாக அரிக்கிறது. காரணம் எனக்கு உயர்வுதராத ஊழேயாகும். என்சொல்லைக் கேட்டு நான்சொன்னதை உறுதிசெய்துகொள்க.

**இலக்கணக்குறிப்பு** : ஆ - ஆக என்பதன்குறுக்கம். இச்செய்யுள் உவமையணி.

92. **பற்றிவைத்த என்அறிவைப் பாழ்ங்கவலை வீண்படவே**
**முற்றிவைத்த வம்பின் முதலாக்கக் காரியமோ**
**நெற்றிவைத்த கண்ணரொடு நீநடுவாய்த் தாய்இதைநான்**
**ஒற்றிவைத்த(து) உண்டோ உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பற்றிவைத்த= உன்னை உட்கொண்ட. முற்றிவைத்த= மிகமுற்றிய. முதல்= முதற்பொருள். நடுவாய்த்தாய்= உள்ளத்தில் பொருந்தினாய். இதை= என்னுளத்தில் பொருந்திய உன்னை. ஒற்றிவைத்தது= தள்ளிவைத்தது.

**பொழிப்புரை :** உலகுடைய தாயே! உன்னை உட்கொண்ட எனதுஅறிவை, பாழாய்ப்போன கவலை வீணாகமுற்றிய வம்புக்கு முதற்பொருளாக்கச் செயற்படுகிறதோ! நுதற்கண்ணராகிய சிவபிரானுடன் நீ என் உள்ளத்தில் பொருந்தியுள்ளாய். இவ்வாறு பொருந்தியுள்ள உங்களை நான் தள்ளிவைத்ததில்லை. உன்னை உட்கொண்டஅறிவைக் காத்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : உண்டோ - எதிர்மறைஓகாரம்.

93. **விட்டிலே ஒத்து விளக்கிலே வீழும்வினைக்**
**கட்டிலே வீழ்ந்துதவம் காண்கிலேனென்(று) ஏங்குவனோ**
**தட்டிலே ஏழைமனம் சஞ்சாரப் பட்டுமயல்**
**ஒட்டிலே வீழாது உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : விட்டில்= விட்டில்பூச்சி. கட்டு= தொகுதி. தட்டு= வறுமை. சஞ்சாரப்பட்டு= அலைந்து. மயல் ஒட்டு= மாயைப்பிணைப்பு.

**பொழிப்புரை :** உலகுடைய தாயே! விளக்குச்சுடரில் விழும் விட்டில்பூச்சியைப்போல் நான், வினைத்தொகுதியில் வீழ்ந்து, தவவாழ்வைக் கைவிட்டு ஏங்க மாட்டேன். . வறுமை காரணமாக அற்பனாகியஎன்மனம் அலைந்து மாயைப்பிணைப்பில் வீழாது.

**இலக்கணக்குறிப்பு** : ஏங்குவனோ - ஓகாரம் எதிர்மறை. இச்செய்யுள் உவமையணி.

94. **நான்ஏதும்இங்(கு) உண்மைசொல்ல ஞானம்அறி யேன்மயிலே**
**மானேஎன் பொன்னே மணியே மரகதமே**
**தேனேமென் பால்சேர்ந்த தீங்கனியே மாங்குயிலே**
**ஊனேஎன் பேன்கேள் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : நான் உண்மைஏதும் சொல்லஞானம் அறியேன் என்க ஞானம்= அறிவு. ஊனே= என்னுடம்பே.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! உன்னைப்போற்றி உண்மைகூற நான்ஏதும்அறியேன். மயிலே, மானே, என் பொன்னே, மாணிக்கமே, மரகதமே, தேனே, பாலுடன் கூடிய மென்மையான இனிய கனியே, மாஞ்சோலைக் குயிலே, ஈடேற்றம்தரும் உடம்பே என்று கூறக்கேள்.

**விளக்கம்** : உயிர் ஈடேற ஐம்பொறிகளும் அவற்றின் புலன்களும் காரணம் ஆதலின், உயிர்க்கு ஈடேற்றம் தரும்அன்னையை ஊனே - உடம்பே என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : மானே பொன்னே ............ஊனே - ஏகாரங்கள் இசைநிறைக்க வந்தன.

95. **மண்ணும் குழிந்தஅற்பர் வாயிலில்போய் வந்துநொந்த**
**எண்ணும் குழம்பும்மனம் ஏங்கும்எனக் கேஇரங்காய்**
**பண்ணும் குழைந்தசொலும் பால்மணக்க மேனைமுலை**
**உண்ணும் குழந்தாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : மண்ணும் குழிந்த= மாட்சிமையற்ற. போய் வந்து= சென்றும் வந்தும் - அலைந்து. எண்ணும்= எண்ணமும். இரங்காய்= இரங்குவாயாக. பண்ணும் குழைந்த= பண்ணும் தோல்வியுற்ற. மேனை= இமவான்மனைவி.

**பொழிப்புரை** : பண்களும் தோல்வியுறப் பேசும்மேனையின் முலைப்பாலை வாய்மணக்கக் குடிக்கும் குழந்தையாகிய உலகுடைய தாயே! மாட்சிமை இல்லாத அற்பர் வீட்டுவாசலுக்குச் சென்றும் வந்தும் அலைந்ததால் நொந்த என்எண்ணம் குழம்பும், மனமும் ஏங்கும். குழம்பும்மனமும் ஏங்கும் மனமும் கொண்ட என்மேல் கருணைகாட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : மனம் - உம்மைதொக்கது. பண்ணும் உம்மை உயர்வுசிறப்பும்மை.

96. **பொட்டகத்துப் பொன்போலும் புட்கலத்துச் செம்மணிபோல்**
**இட்(டு)அகத் துள்ளேநான் என்றும்வைத்துக் காண்பேனோ**
**சட்டகத்(து)உக்க ஒன்றோ கைத்(து)ஆட்சிபல கூனிஇதுஎன்ன**
**ஒட்டகத்துக்(கு) உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பொட்டகம்= பாதுகாப்பான பெட்டி. புட்கலம்= இது ஏழுவகை மேகங்களுள் ஒன்று. சட்டகத்து உக்ககைத்து ஆட்சிஒன்றோ பல= உடம்பில் வைத்து ஆளும் எண்ணம் ஒன்றோ பல. ஒட்டகத்துக்குக் கூனி இதுஎன்ன= ஒட்டகத்துக்கு உள்ள கூன்கள்போல் பல.

**பொழிப்புரை** : உலகுடைய தாயே! பாதுகாப்புப் பெட்டிக்குள் வைத்துக் காக்கும் பொன்போல, புட்கலாவர்த்தம் என்ற மேகத்தில் உள்ள மாணிக்க மணிபோல் உன்னைஎன் மனத்தில்காப்புடன் வைத்துக் காப்பேன். நான்உடம்பில் வைத்து ஆளும்எண்ணம் ஒன்றல்ல, ஒட்டகத்துக்கூன்போல் திமில்போல் என் எண்ணமும் பல. அருள்க.

**விளக்கம்** : இலக்கியவழக்கில்; கானமுகில், சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலம், சங்காரம், துரோணம், நீலவருணம் என்று ஏழுவகை மேகங்களைக்கூறுவர். ஒட்டகத்துக்கும் கூன்கள்பல போல் என் எண்ணங்களும் - விருப்பங்களும் பல, அருள்க என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : என்ன - உவமச்சொல். இச்செய்யுளில் மூன்று உவமையணிகள் உள.

97. **பெண்டாட்டி பிள்ளைஎனப் பேயாட்டம் காட்டிஎனைக்**
**கொண்டாட்டு வித்தஉனைக் கொண்டாட வேண்டாமோ**
**மிண்டுஆட்டு பாழ்ங்கலியால் வீண்ஆட்டம் ஆட்டிஎனை**
**உண்டாட்ட வேண்டாம் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : காட்டி= ஆடச்செய்து. கொண்டாட்டுவித்த= புகழச்செய்த. மிண்டு= மதம். கலி= துன்பம். ஆட்டம் ஆட்டி= ஆட்டம்போடச்செய்து. உன்டாட்ட வேண்டாம்= களிக்கவேண்டாம்.

**பொழிப்புரை** : பெண்டாட்டி பிள்ளை என்று சொல்லிஎன்னைப் பேயாட்டம் ஆடச்செய்து, பிறர் புகழச்செய்த உன்னைநான் கொண்டாடவேண்டுமா!. மதங்கொண்டு என்னைஆட்டுகிற பாழானதுன்பத்தால் நீ களிப்புக்கொள்ள வேண்டாம். துன்பங்களைத் துடைத்தருள்க.

**விளக்கம்** : உன்னைக்கொண்டாட வேண்டாமோ என்றது புகழ்வதுபோல் பழித்தல்.
**இலக்கணக்குறிப்பு** : வேண்டாமோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது.

98. **பற்(று)அப் பிறவினைஐம் பாலின்மறைத் தோர்வளர்த்த**
**தெற்றைப் பிறகிடில்இத் தீப்பிறவி தீராதோ**
**மற்றைப் பிறைமயங்க வட்டரத்னச் சுட்டிகட்டும்**
**ஒற்றைப் பிறையாய் உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : பற்று அப் பிறவினை= தன்னைபற்றிக்கொண்ட தீங்குகளை. ஐம்பாலின் மறைத்தோர்= ஐவகையாக முடிக்கப்பெறும் கூந்தல்அலங்காரத்தால் மறைக்கும்பரத்தையர். தெற்று= தவறு. பிறகிடில்= பின்தள்ளினால் - கைவிட்டால். தீராதோ= தீரும். மற்றைப்பிறை= வானத்து மூன்றாம்பிறை. வட்ட ரத்னச் சுட்டி= வளைந்த இரத்தினம்பதிக்கப்பெற்ற நெற்றிச்சுட்டி. ஒற்றைப்பிறை= ஒப்பற்றபிறை.
**பொழிப்புரை** : வானத்துப்பிறைநிலா மயங்குமாறு, இரத்தினம்பதிக்கப்பெற்றவளைந்த நெற்றிச்சுட்டி யாகிய ஒப்பற்றபிறையணிந்தவளே! உலகுடைய தாயே! தன்னைப்பற்றிய தீங்குகளை / நோய்களைத் தனது ஐவகையாக முடிக்கப்பெறும் கூந்தல் அலங்காரத்தால் மறைக்கும்பரத்தையர்பால்வளர்த்துக்கொண்ட தவறுகளைக் கைவிட்டால் தீயைப்பிறவி தீராதோ - தீரும்
**விளக்கம்** : ஐவகைத் தலைமுடிப்பு : முடி, கொண்டை, சுருள், குழல்,பினிச்சை என்பன.

99. **காமச் சுடர்நெருப்புக் காயவழி தேர்ந்துநெஞ்சில்**
**ஏமச் சுடர்பொறிபோல் என்றும்வைத்துக் காண்பேனோ**
**சோமச் சுடர்முடித்தார் சூர்யோ தயச்சுடர்சேர்**
**ஓமச் சுடரே உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை** : காமச்சுடர் நெருப்பு= ஆசையாகிய ஒளியுடைய தீ. காய= அணைய ஏமச்சுடர்பொறி= பாதுகாப்புத்தரும் சுடர்ஒளி. சோமச்சுடர்= ஒளியுடைய பிறைநிலா. சூர்யோதயச்சுடர்= உதயசூரியன்போல் செந்நிறமுடைய சிவபிரான். ஓமச்சுடர்= வேள்விச்சுடர்.
**பொழிப்புரை** : ஒளிரும் பிறைசூடியவரும், உதயசூரியனின் செந்நிறத் திருமேனியரும் ஆகிய சிவபிரானுடன் இணைந்த வேள்விச்சுடராய் விளங்குகிறவளே! உலகுடைய தாயே! ஆசையாகிய ஒளியுடைய தீ அணைவதற்குரிய வழியை ஆராய்ந்து, அது அணைவதற்குரியதாக, பாதுகாப்பான ஒளிச்சுடர்போல் விளங்கும் உன்னை என்மனத்தில் வைத்துக் காத்துக்கொள்வேன்.
**இலக்கணக்குறிப்பு** : காமச்சுடர், ஓமச்சுடர் - உருவகங்கள். காண்பேனோ - ஓகாரம் அசைநிலை.

100. **வெவ்வா தனைவினையை மேவா(து)அ ருள்கிலைவே(று)**
**எவ்ஆ தர(வு)இங்(கு) இரவா(து) இரங்காயேல்**
**அவ்ஆதவன் வெயிற்(கு)உள் ளானபுழு வாய்மெலிவது**
**ஒவ்வா(து) என்அம்மே உலகுடய மாதாவே.**

**குறிப்புரை** : வெவ்வாதனை= கொடிய துன்பம். வினை= ஊழ். ஆதவன்= சூரியன். மெலிவது= துன்புற்றுத்துடிப்பது. ஒவ்வாது[= பொருந்தாது - தகாதது
**பொழிப்புரை** : உலகுடைய தாயே! என்னூழ்வினை கொடிய துன்பம்தராது எனக்கு நீ அருளவில்லை. உன்னைத்தவிர எனக்கு என்ன ஆதரவு உள்ளது? நான்பிறரிடம் யாசிக்காமல் இருக்க எனக்கு நீ அருளாவிடில் நான் சூரியனின் வெயிலிற்பட்ட புழுவாக மனம் துடிப்பது உன்தகுதிக்குத் ததாதஒன்று. அருள்புரிக.
**விளக்கம்** : " சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடன் " ( சிவஞான போதம். உதாரணச்செய்யுள் ) ஆதலின் தலைவியாகியநீ உன்தொண்டனாகிய என்னைக்காவாதது உனக்குத் தகுதியல்ல என்றார்.

“ என்பிலதனை வெயில்போலக் காயும் “ என்ற  தொடரை ஆண்டுள்ளார்.

**இலக்கணக்குறிப்பு :** அருள்கிலை - முன்னிலை ஒருமைவினைமுற்று. இச்செய்யுள் உவமையணி

101. **ஏழிசைய வண்(டு)இரங்க எண்திசைய வெண்துகிலார்**
**சூழிதழி கிண்டு துணைத்தாள் அளித்தூள்வாய்**
**ஆழிநெடு நீர்ஒருகை ஆபோச னத்தார்தொழ**
**ஊழிதொறும் வாழி உலகுடைய மாதாவே.**

**குறிப்புரை :** ஏழிசைய= ஏழிசை முரலும். இரங்க= ஒலிக்க. வெண்துகிலார்= வெண்மையான ஆடையாக உடுத்தசிவபிரான். அளிகிண்டு இதழிதூள் தாள்= வண்டுகள் கிண்டும் கொன்றைமலரின் மகரந்தம் பொருந்திய திருவடி. ஆபோசனத்தார்= பருகிய அகத்தியர்.

**பொழிப்புரை :** ஏழிசை பாடும் வண்டுகள் முரல,எட்டுத்திசைகளையும் வெண்மையான ஆடையாக உடுத்த சிவபிரானின் இருதிருவடிகளிலும் அடியவர்இட்ட கொன்றைமலர்களை வண்டுகள் கிண்ட, அதனால் சொரிந்த மகரந்தமுடைய திருவடிகளை, கடலின்  நீர்முழுவதையும் தனது ஒருஉள்ளங்கையில் எடுத்துப்பருகிய அகத்தியமுனிவர் வணங்க, ஊழிகள்தோறும் அருள்தரு உலகுடைய தாயே! நீ நிலையாக வாழ்க.

**விளக்கம் :** ஏழிசைகளாவன : தமிழில்; கைக்கிளை, உழை, இளி, விளரி,தாரம் குரல், துத்தம் என்பன. இவற்றை வடமொழியில் முறையே; நிஷாதம், ரிஷபம், மத்திமம், தைவதம்,ஷட்ஜமம், காந்தாரம், பஞ்சமம் என்பர்.

**இலக்கணக்குறிப்பு :** ஏழிசை, எண்திசை - தொகைக்குறிப்புகள். ஆபோசனத்தார் - வினையாலணயும் பெயர். இச்செய்யுள் வாழ்த்துஅணி.

திருச்சிற்றம்பலம்